# ஆயிரக்கணக்கான நம் நாட்டு மக்கள் தங்களுடைய சேமிப்பை உங்கள் தொழிலில் முதலீடு செய்வதென்பதன்றோ நம்பிக்கைக்குச் சான்று!



இச்சம்பவம் பல வருடங்களுக்கு முன் நடந்தது—அதாவது டாடா அயர்ன் & ஸ்டீல் கம்பெனி துவங்கியபொழுது. ஆயிரக்கணக்கான மக்கள் 'அமருவதற்கு ஆசனமும், உண்பதற்கு உணவும்' உடன் எடுத்துச் சென்று டாடாவின் அலுவலகத்தின் முன் அவரது புது கம்பெனியில் பங்கு (ஷேர்) வாங்கக் காத்து நின்றனர்.

பணக்காரர், ஏழை, இரு சாராருமே ஒன்றுபோல் பணத்தை முதலீடு செய்தனர்.

மூன்றே வாரங்களில் சுமார் எட்டாயிரம் மக்கள் 230 லட்சம் ரூபாயை புதிய தொழில் துவக்கத்தில் "முதலீடு செய்தபொழுது ஸ்ரீ தொராப்ஜீ டாடா அவர்கள் இச்சாதனையைப்பற்றி பெருமையுடன் எழுதியதாவது: 'அது ஒரு முற்றும் புதிய சுதேசி ஸ்தாபனமாக, சுதேசிகளின் பணத்தையும், சுதேசிகளின் ஆக்கத்திறனையும் கொண்டு உருவாக்கப்பட்டது'.

அது நடந்தது 1907ம் ஆண்டில். இன்றும் டாடா ஸ்டீலில் அதே பொறுப்புணர்ச்சி தலைதூக்கி நிற்கிறது. இந்திய மக்களில் சுமார் எழுபத்து ஐயாயிரம் பேர் டாடா அயர்ன் & ஸ்டீல் கம்பெனியில் பங்குதாரர்களாக இருக்கும் அதே பெருமிதம் இன்று ஒரு விதத்தில் டாடாவில் தலைமுறையாக வரும் சம்பிரதாயமாகவே ஆகிவிட்டதென்று கூறலாம்.



டாடா ஸ்டீல்

HT-TIS-7352

# பொங்கல் திருநாள் சிறக்க... ராசி!





பட்டுப் புடவைகள்,
பட்டு வேஷ்டிகள்,
கைத்தறி நூல் சேலைகள்,
ரெடிமேட் ஆடைகள்!
புதிய டிசைன்கள்!
புதிய வண்ணங்கள்!



ராதா சில்க்கின்
ராசி உன்னத
வாழ்வுக்கு ஆசி

**ராதா சில்க் எம்போரியம்**
சென்னை-600004



சார்பு நிறுவனம்
**ராதா சில்க்ஸ்**
'தன்பில்டிங்ஸ்', மவுண்ட் ரோடு,
சென்னை-600002

பம்பாய் கிளை
**ராதா சில்க் எம்போரியம்**
29, கோவிந்த் மஹல்;
86-B, மரைன் டிரைவ், G. ரோடு
பம்பாய்-400002

EP-RASI-95

**15-1-1975 வரை பொங்கல் பண்டிகைக்காக கைத்தறி பட்டுப் புடவைகளுக்கு 10% விசேஷ தள்ளுபடி.**

# கல்கி

ஆனந்த மார்கழி, 21 ★ ஜனவரி 5, 1975

"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

○

மேலட்டை வண்ணப்படம்: உத்தரா




## அடுத்த இதழில்

**சிறுகதைகள் :**

- △ ஜெகசிற்பியன்
- △ சுஜாதா
- △ சிவசங்கரி

**சிறப்புப் பகுதி :**

கிரிக்கெட் காப்டன்களின் வண்ணப் படங்கள். ஓஹோ! போடவைத்த ஒப்பற்ற காட்சிகள்.

**தொடர் அம்சம் :**
தலைவர் தரிசனம்
முதல் வாரம் :
காமராஜ்

**கிரிக்கெட் கிராக்கர்ஸ் :**
உமாபதியின் நகைச்சுவைப் பக்கங்கள்

**தொடர் நாடகம் :**
சோ

# நட்சத்திரமும் நவநாகரீகமும்

## லால்பாய் டெக்ஸ்டைல்ஸ்

உங்களுக்கென ஒரு பாக்ய நட்சத்திரம்...
ஒரு நாகரீகம் உண்டு... இரண்டையும்
சிறப்புடன் இணைப்பது—லால்பாய்
டெக்ஸ்டைல்ஸ். பெருமை மிகு
பிரிண்டுகள், அருமையான வண்ணங்கள்—
பலவிதத் துணி வகைகள்.
தேர்ந்தெடுக்க 7 மடங்கு வகைகள்
வேறு எங்குதான் கிடைக்கும்?

**மகரம் :**
நீங்கள் அறிவாற்றல் படைத்தவர்.
அதோடு, உலகியல் அறிந்து
நடப்பவர். உங்கள் செயலில்
நிதானமும் ஆழமும் இருக்கும்.
உங்கள் அதிர்ஷ்ட வண்ணங்கள்—
வெளிர் சிவப்பு (பிங்க்),
ராயல் நீலம், கரும் பழுப்பு.
நாகரீகத்தின் முன்னோடியாக
நீங்கள் விளங்கினாலும்
விளங்கா விட்டாலும்,
— தனித்து நிற்கும்
வண்ணம் எடுப்பாக
உடுக்கத்
தெரிந்தவர்.

**மீனம் :**
நீங்கள் மிக
அடக்கமானவர்.
மற்றவர்கள்
எளிதில்
உங்கள் மனத்தை
மாற்றி விடுவார்கள்.
நீங்கள் பற்பல நற்குணங்களும்
திறமையும் நிறைந்தவர்.
ஆயின் உங்களுக்கே அவை தெரியாது.
உங்கள் அதிர்ஷ்ட வண்ணங்கள்—
மென் கடற்பச்சை (லைட் ஸீ கிரீன்),
நீல வண்ணங்கள், இளம் பழுப்பு
(மாவ்), நாகரீகமாக உடுக்க
விரும்புவீர், ஆயின் அதில்
எப்போதும் வெற்றி பெறுவதில்லை.

**கும்பம் :**
நீங்கள் எளிமையானவர்.
ஆடம்பரமற்றவர். நல்ல
தொண்டாற்ற உங்களையே
அர்ப்பணித்துக்
கொண்டவர். உங்கள்
அதிர்ஷ்ட வண்ணங்கள்—
கரும் பச்சை, ஊதா
வண்ணம், பழுப்பு
(ப்ரௌன்). நவ
நாகரீகத்தை விட, குறிக்
கோளுக்கே அதிக
முக்கியத்துவம் கொடுப்
பவர் நீங்கள்.

லால்பாய்
அதிர்ஷ்டப் பொருத்தம் அளிப்போர்




ஏழு மில்களின் ஏற்றமிகு துணிகள்

CMLB.38.183 TH

**சில்லறை விற்பனையாளர்கள் :**
M/s. வெங்கடேஷ், 243, 244, என்.எஸ்.ஸி. போஸ் ரோடு, சென்னை-1.
M/s. ஆனந்த் டெக்ஸ்டைல்ஸ், பெரிய கடை வீதி, திருச்சி-8.
M/s. ஈஸ்வரீஸ், 26-பி, மேற்கு டவர் தெரு; மதுரை-1.

# பசுமைப் பேச்சுப் புரட்சி!

உணவு நெருக்கடி இல்லை, இல்லவே இல்லை என்று ஜகஜீவன் ராம் திரும்பத் திரும்பச் சொல்கிறார். மக்களிடம் கலவரம் அடங்கவும் பதுக்குவதால் பயனில்லை என்பதாக வியாபாரிகளை எண்ணச் செய்யவும் அவர் இப்படிப் பேசுவதாகத் தோன்றுகிறதே யொழியப் பிரத்தியட்ச நிலைமையைப் புரிந்து கொண்டு அவர் பேசுவதாகப்படவில்லை.

தமிழ் நாடு இவ்வாண்டு மிகவும் சிரமதசையான நிலைமையை அனுபவிக்கப் போகிறது. ஒரிஸ்ஸா, ராஜஸ்தான் மாநிலங்களும் இப்படியே ஆபத்தான சூழலில் சிக்கியுள்ளன.

இந்தச் சந்தர்ப்பத்தில் ஏழெட்டு மிலியன் டன்கள் வரை உணவுத் தானியங்களை அரசு சேமித்து வைத்துக் கொண்டால் ஒழிய அமைச்சர் நம்பிக்கையுடன் பேசுவதில் அர்த்தமில்லை.

அமைச்சரின் அபரிமிதமான தன்னம்பிக்கை அதிகாரிகளின் அலட்சியப் போக்குக்கு வழிவகுத்து நிலைமை மேலும் மோசமாக்கிவிடலாம்!

கல்கி

மலர் 34

இதழ் 23

# அன்பிலிடம் காட்டாத அன்பு!

அன்பில் தர்மலிங்கத்திடம் முதல்வருக்கு அன்பு தட்டுக் கெட்டுப் போகவில்லை என்பது நூற்றுக்கு நூறு சதவீதம் நிருபணமாகிவிட்டது. முக்கியத்துவம் அதிகமில்லாத செய்தி பிரசார இலாக்காவை அவரிடம் தள்ளிவிட்டார்.

அதுதான் போகட்டும் என்றால் மாதவனிடமிருந்து தொழில் அமைச்சரவையைப் பிடுங்கிக் கொண்டதற்குத்தான் அதிகமாக உள்நோக்கம் கற்பிக்கப்படுகிறது. மாதவன் தொழில் வளர்ச்சியில் பிரமிக்கத்தக்க சாதனைகள் புரியாவிட்டாலும் கூடியவரை முன்னேற்றம் கண்டு தொழில் வட்டாரங்களில் நல்ல பெயர் எடுத்து வந்தார். அவரிடமிருந்து தொழில் அமைச்சைத் தாமே எடுத்துக் கொண்டது மனத் தாங்கலை வளர்க்கவே செய்யும் என்பதாகக் கருதப்படுகிறது. ஆனால் இப்போது தமிழகத்தில் நிலவும் உணவுப் பற்றாக்குறையைச் சமாளிக்க மாதவனைப் போன்ற திறமைசாலிகள் தேவை என்பதாகவும் முதல்வர் கருதியிருக்கலாம் அல்லவா? அதோடு இதுவரை உணவு இலாக்காவைக் கவனித்து வந்த நாராயணசாமியிடம் தமது அதிருப்தியை முதல்வர் காண்பித்துக் கொண்டிருக்கிறார் என்றும் கருதலாம்.

முதல்வரின் நோக்கங்கள் யாதாயினும் ஏகப்பட்ட முக்கிய பொறுப்புக்களைத் தாமே சுமப்பது சரியல்ல. குருவி தலையில் பனங்காய் என்று யாரும் எண்ணமாட்டார்கள். கருணாநிதியின் சுறுசுறுப்பைக் குறைத்து மதிப்பிட்டுவிடவும்மாட்டார்கள். ஆனால் ஒட்டகம் கூடப் பளு தாங்காமல் படுத்துவிடுவது உண்டு. சக்திக்கு மீறிப் பொறுப்புக்களை ஏற்பது தாமதங்களுக்கு வழி வகுக்கலாம் என்பதால் நாட்டுக்கும் நல்லதல்ல.

# குதிரை விலை; யானை விலை!

சர்வதேச திரைப்பட விழா டிக்கெட்டுகளுக்குப் புது தில்லியில் ஏக கிராக்கியாம். கிராக்கியை ஏற்படுத்தியதே வாய்க்கு வாய் சோஷலிஸம் பேசும் அமைச்சர்களும் உயர் அதிகாரிகளும்தான். அதிகார பூர்வமான உத்தரவுக் கடிதங்களை அனுப்பியே ஒவ்வொருவரும் இருபது இருபத்தைந்து டிக்கெட்டுகளை மடக்கிக் கொண்டார்கள். பொதுமக்கள் குதிரை விலை கொடுத்து ஸீஸன் டிக்கெட் வாங்கத் தயாராக ஆயிரக்கணக்கில் வந்தும் டிக்கெட் இல்லை என அறிந்து ஏமாந்து திரும்பினார்கள். பிறகு என்ன, சோஷலிஸத்துக்கு ஜே போட்டுக் கொண்டு கறுப்புச் சந்தை கொடி கட்டிப் பறக்க வேண்டியதுதானே? குதிரை விலைக்கு வாங்கிய டிக்கெட்டுகளை யானை விலைக்கு விற்க வேண்டியதுதானே!

# என்ன சேதி?

## சாணி ஏற்றுமதி!

அரசுத் துறையில் ஊழல்கள், ஆற்றலின்மைக்கு நம் நாட்டில் நிறையவே உதாரணங்கள் கிடைத்துள்ளன. தனியார் துறையில் திறமைக்கு ஓர் அமெரிக்க உதாரணம் பாருங்கள். ஒரு சின்ன தனியார் துறை நிறுவனம் சாணியை ஏற்றுமதி செய்யத் துணிந்து, நூறு கோடி டாலருக்கு ஆர்டர் பிடித்திருக்கிறது.

துப்பாய், பஹ்ரெய்ன் நாடுகள் எண்ணெய் ஏற்றுமதியில் கொள்ளை லாபம் அடிப்பன. ஆனால் அங்கே நிலம் விளைச்சலுக்கு உதவாத வெறும் பாலைவனம்தான். அதைச் சோலைவனம் ஆக்க எரு அனுப்புகிறோம் என்று கூறி அந்தத் தனியார்த்துறை நிறுவனம் எண்ணூறு கோடி ரூபாய்க்கு ஆர்டர் பெற்றிருக்கிறது!

இதில் விஞ்ஞான ரீதியான ஒரு சாதனையையும் காண்கிறோம். சாணத்தில் மீதேன் என்ற ஆபத்தான வாயு உற்பத்தியாகும். அது உருவாகாமல் தடுக்க ஏற்பாடு செய்து பிறகு கப்பலேற்றுகிறார்கள்!

## நேசக் கரம் நீளட்டும்!

அமெரிக்கத் தூதர் திரு மொய்னிஹான் பதவியை விட்டு விலகித் தாய் நாட்டுக்குத் திரும்பும் தருவாயில் இரண்டு நாடுகளுக்கும் பயன்படக் கூடிய வகையில் நடுநிலை வகித்துச் சில வார்த்தைகள் கூறியுள்ளார்.

அமெரிக்கா வரவர பாரத நாட்டை அலட்சியம் செய்துவிட்டு சீனவின் உறவை அதிகமாக நாடுவதை ஒரு விதத்தில் கண்டித்திருக்கிறார். என்ன இருந்தாலும் பாரதம் ஜனநாயக நாடு. உலகில் சுதந்திரப் பிரஜைகளாக வாழும் மக்களில் சரி பாதிப்பேர் இந்தியாவில் வாழ்கிறார்கள் என்பதை மறந்து விடவேண்டாம் என்று சுதந்திர வாழ்க்கை முறையைப் பின்பற்றும் அமெரிக்கர்களுக்கு அறிவுறுத்தி யிருக்கிறார்.

அமெரிக்கா கம்யூனிஸ்ட் நாடான ருஷ்யாவுடன் வர்த்தக உறவு கொள்ளலாம் என்றால் இந்தியாவும் அம்மாதிரி ருஷ்யாவுடன் நேச உறவு கொண்டால் அதை ஆட்சேபிப்பானேன் என்று அமெரிக்கர்களைக் கேட்கிறார் மொய்னிஹான்.

கம்யூனிஸ நாடுகளான ருஷ்யாவும் சீனவும் தங்கள் நாட்டு மக்களின் நலம் என்று வந்தால் தங்கள் கொள்கைகளைக் காற்றில் பறக்க விட்டு விட்டுத் தாங்கள் சதாகாலமும் நிந்தித்து வரும் முதலாளித்துவ ஜனநாயக நாடுகளான அமெரிக்காவுடனும் கானடாவுடனும் நேச உறவும் வர்த்தக உறவும் கொள்ளத் தயங்குவதில்லை. ஆனல் ஜனநாயக நாட்டினரான நாம், ருஷ்யா என்ன நினைக்குமோ, என்று மெரிக்காவுடன் நேச உறவு வைத்துக் கொள்ளத் தயங்குகிறோம். கம்யூனிஸ நாடுகள் அக்கிரமம் செய்தால் வாய் பொத்தி மௌனமாக இருந்து விடுகிறோம். அதுவே ஜனநாயக நாடான அமெரிக்காவோ, பிரிட்டனே ஒரு சிறு தவறு செய்தால் கூடப் பலமாகக் கண்டனக் குரல் எழுப்புகிறோம்.

இந்தப் போக்கெல்லாம் மாறி இனி அமெரிக்காவுடன் புது உறவு தொடங்க வேண்டும். மொயினிஹான் விடைபெறும் தருவாயில் கூறிய மொழிகள் அதை நமக்கு அழுத்தமாய் வலியுறுத்திச் சொல்கின்றன.

## உடைத்துச் சொன்னர் சாதிக்பாட்சா!

நெடுநாட்களாகப் பலரது உள்ளங்களை உறுத்திக்கொண்டிருந்த ஒரு விஷயத்தை திரு சாதிக்பாட்சா வெளிப்படையாகவே சொல்லி விட்டார். குடும்பக் கட்டுப்பாடு முயற்சிகள் மதச் சம்பிரதாயங்கள் காரணமாகத் தடைப்படக் கூடாது என்று கூறி விட்டார். இதை விட அதிகமாக முஸ்லிம்களுக்கு அவராலும் விண்டுரைத்து விளக்க முடியாது.

மதத்தைச் சாக்கிட்டுக் கொண்டு முஸ்லிம்கள் மட்டும் குடும்பக் கட்டுப்பாடு முயற்சிகளில் ஈடுபடாதிருந்தால் நாளடைவில் அம்மதத்தினரின் ஜனத்தொகை நாட்டில் மிக அதிகமாகிவிடும் என்ற நியாயமான கவலை பலரிடம் இருந்துவருகிறது. வேண்டாத வகுப்பு மாற்சரியங்களுக்கும் இடந் தந்து வருகிறது. இதனைத் தவிர்க்கும் வகையில் திரு சாதிக்பாட்சா இதை உணர்ந்து பேசியிருப்பது பாராட்டுக்குரியது. தலைநகரில் ராஷ்டிரபதி மாளிகையில் வாசம் புரிகிறவரும் இதையே பேசலாம்; பேச வேண்டும்.

---

ராஜாஜி சிந்தனை

### கரையின்றி ஆறு இல்லை!

நதி என்பது தண்ணீர்தான். ஆனல் நதி என்பது கரைகளும்கூட. ஆற்றங் கரை இன்றி ஆறு இல்லை. இப்படி ஓர் அமெரிக்கர் எழுதியுள்ளார்.

அரசியல் அதிகாரம் ஆறு என்றால் நீதித் துறை அதன் கரைகள். அரசியல் நிர்ணயச் சட்டம் இப்படித்தான் வகுத்துள்ளது. எனவே, ஜனநாயகத்தில் அரசியல் அதிகாரம் பெற்று உயர் பதவியில் இருப்பவர்கள் முன்னேற்றம் என்ற பெயரில் நீதிபதிகளுக்கு எச்சரிக்கை விடுக்கவோ அவர்களுக்கு நன்னடத்தையைச் சொல்லித் தரவோ முற்பட்டால் அது அரசியல் நிர்ணயச் சட்டத்துக்கு அவர்கள் செய்யும் பச்சைத் துரோகமாகும்.

— சுயராஜ்யா, டிசம்பர் 2, 1961

# ௨ :.பாஸ்:.போமின் டானிக்..









## :.பாஸ்:.போமின் அயன்

**பெண்களுக்கான
அயன் டானிக்**

:.பாஸ்:.போமின் அயன் சத்து மிக்க சிவப்பு இரத்தம் உருவாகக் காரணமாயிருந்து உதவுவதுடன் சக்தியையும் பெருக்குகிறது. பெண்களுக்கான :.பாஸ்:.போமின் அயனைத் தவறாமல் தினம் உட்கொள்ளுங்கள்.

## :.பாஸ்:.போமின் விடமின்

**குடும்பத்திற்கான
விடமின் டானிக்**

:.பாஸ்:.போமின் குடும்ப ஆரோக்கியத்திற்குத் தேவையான விடமின் பி காம்ப்ளெக்ஸ் மற்றும் பல்வேறு கிளிஸரோபாஸ்பேட்டுகள் அடங்கிய விடமின் டானிக்காகும்.

குடும்பத்தினர் அனைவரும் திட ஆரோக்கியத்துடன் திகழ 2 **:.பாஸ்:.போமின்** டானிக்

:.பாஸ்:.போமின் அளிக்கும் இரு டானிக்குகளும் பசியைத் தூண்டி, வலிவைப் பெருக்கி, நோய்களை எதிர்க்கும் சக்தியைக் கூட்டுவனவாகும்.





சென்னை மியூசிக் அகாடமியின் நாற்பத்தெட்டாவது இசைவிழாவிற்குச் சங்கீத கலாநிதி வித்வான் ஆர். அனந்தகிருஷ்ண சர்மா தலைமை வகித்தார்.

முதல் நாள் பிரியம்வதா சங்கரின் பரத நாட்டிய நிகழ்ச்சி அருமையான கலை விருந்தாயிருந்தது.

விழாவைத் தொடங்கி வைத்த நீதிமந்திரி திரு சி. சுப்பிரமணியம் அவர்களுக்கு மியூசிக் அகாடமியின் தலைவர் ஸ்ரீ டி. எஸ். ராஜம் வரவேற்பிதழை வழங்குகிறார். அருகே காரியதரிசி டாக்டர் வே. ராகவன்.









சென்னை தியாகராயநகர் வாணிமகாலில் இந்தியன் பைன் ஆர்ட்ஸ் சொசைட்டியின் ஆதரவில் நடைபெற்ற இசை விழாவில் செம்மங்குடி ஸ்ரீ சீனிவாச அய்யருக்குச் 'சங்கீத கலாசிகாமணி' என்ற விருதைத் தமிழக உயர்நீதிமன்ற நீதிபதி கோகுலகிருஷ்ணன் சூட்டி மலர்மாலையும் அணிவிக்கிறார்.

சொசைட்டியின் தலைவர் வி. எம்பெருமானுர் செட்டி வரவேற்புரை நல்குகிறார். குமாரி மாதங்கி வரதனின் நடனத்தோடு சங்கீத விழா தொடங்கியது.



தமிழிசைச் சங்கத்தின் முப்பத்திரண்டாம் ஆண்டு விழாவுக்குத் தலைமை வகித்த திருவிழிமிழலை சுப்பிரமணிய பிள்ளைக்கு ''இசைப் பேரறிஞர்'' என்ற விருதை வழங்கிப் பாராட்டுனர் சென்னை உயர்நீதி மன்ற நீதிபதி இஸ்மாயில்.

# இயற்கை உங்களுக்கு அளித்துள்ளது எழில்மிகு கேசம்...
## அதனை அவ்வண்ணமே வைத்திருப்பீர்
## ஹேலோ கேச பராமரிப்புமூலம்

**ஹேலோ ஷாம்பூக்கள் மட்டுமே சீரான, சிறந்த உத்தியின்படி தயாரிக்கப்படுகின்றன—உங்கள் கேசத்தின் பராமரிப்பிற்கெனவே**




**ஹேலோ காஸ்மெடிக் ஷாம்பூ:**
இந்த விசேஷ ஷாம்பூவை உபயோகித்து, உங்கள் கேசம் எவ்வளவு மெத்தென்றும், மிருதுவாகவும் இருக்க கூடும் என்பதைக் கண்டு கொள்ளுங்கள்.

**ஹேலோ எக் ஷாம்பூ:**
விசேஷ போஷாக்கு மிக்க இந்த ஷாம்பூவில் உள்ள வளமிக்க முட்டைப் புரதத்தின் பயனாக உங்கள் கேசம் கட்டுக்கோப்புடன், கவர்ச்சியாகத் திகழ்கிறது.

**ஹேலோ மெயின்—ஃப்ரெஷ் ஷாம்பூ:**
உங்கள் கேசத்திற்கு இயற்கையான தூய்மையான பளபளப்பைத் தருகிறது.

**ஹேலோ கான்ஸென்ட்ரேட் ஷாம்பூ:**
சாமான்ய நுரையொத்தின் மூலம் உங்கள் கேசத்தை மென்மையாகவும், கட்டுக்கடங்கியும் வைத்திருக்க சிறிதளவே போதும்.

**இயற்கை ஆரோக்கியத்துடன் சவுடிய கேசத்திற்கு—இன்றே உபயோகிக்கத் தொடங்குவீர் ஹேலோ**

# எனக்குக் கனக தாரை

①

ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி
காமகோடி சங்கராசாரிய
சுவாமிகள்



(ஆதிசங்கரர் கனகதாரா துதி பாடி மகாலக்ஷ்மியைப் பொன்மாரி பொழிய வைத்தது பற்றிய அருள் வாக்குத் தொடரைப் படித்து வந்த நேயர்களுக்கு, நம் காமகோடிப் பெரியவர்களின் பீடாரோஹணப் பொன் விழாவில் (1957) அவர்களுக்குக் காஞ்சியில் கனகாபிஷேகம் செய்தபோது அவர்கள் நிகழ்த்திய சொன்மாரியாம் பொன்மாரியை இதே தொடர்பாக அவர்கள் அருளிய வேறு சில பொறுக்கு மணிகளோடு சேர்த்து இங்கு அளிக்கிறோம்.)

இந்தக் காஞ்சீபுரம் மகா க்ஷேத்திரம். இங்கே பரமேசுவரன் ஒரு மாமரத்தடியில் வந்து உட்கார்ந்து கொண்டு ஏகாம்ரேசுவரராக இருக்கிறார். நாம் பண்ணுகிற சகல பாபங்களையும் போக்குவதற்காக மதுரமான இருதயத்தோடு, ஒரே ஒரு மதுர மாம்பழத்தைப் பழுத்துக் கொண்டிருக்கும் ''ஏக ஆம்ர''த்தின் அடியில் வந்து உட்கார்ந்திருக்கிறார். ஒன்றாகவே இருக்கிற ஞானம்தான் அந்தப் பழம். பெரிய காஞ்சீபுரம் என்று இன்றைக்குச் சொல்லப்படுகிற அந்தப் பகுதிக்குச் ''சிவ காஞ்சி'' என்றே பெயர். இங்கே மறு பாதி, சின்னக் காஞ்சீபுரம் என்று சொல்லப்படுவது. இதுவோ ''விஷ்ணு காஞ்சி''. ஒரே மூர்த்தியில் பாதி சிவன், பாதி விஷ்ணு என்று ஹரிஹரனாக, சங்கர நாராயணனாக இருக்கிறமாதிரி, பிரம்ம சிருஷ்டியிலிருந்து உத்தமோத்தம க்ஷேத்திரமாக, சாம்ராஜ்யத் தலைநகராக இருந்து வந்திருக்கிற இந்த ஒரே நகரத்தில் ஒரு பாதி சிவன் பேரிலும் ஒரு பாதி விஷ்ணுவின் பேரிலுமாக விளங்கி வருகிறது. 'வரதராஜன்', 'அருளாளப் பெருமாள்' என்று பேரை வைத்துக் கொண்டு இந்த விஷ்ணு காஞ்சியில் சாட்சாத் பகவான், எந்த யோக்கியதையும் இல்லாத நமக்கெல்லாம் வரங்களை வழங்குவதற்காகவே வந்து நின்று கொண்டிருக்கிறார்.

இந்தக் காஞ்சீபுரமாகிற ஒரே ஊரில் நூற்றெட்டு சிவாலயங்களும், பதினெட்டு திருப்பதி (பெருமாள் கோயில்)களும் இருக்கின்றன.

இதெல்லாவற்றையும்விடப் பெருமையிலும் பெருமையாக ஒன்று இந்தக் காஞ்சியில் இருக்கிறது. இத்தனை கோயில்களில் பிரம்மோத்ஸவங்கள் நடத்துகிற கோயில்கள் நிறைய உள்ளன. உத்ஸவத்தில் பல மூர்த்திகள் வீதி உலா வருகிறார்கள். விஷ்ணு சம்பந்தமான மூர்த்திகள், சிவ சம்பந்தமான மூர்த்திகள் எல்லோரும் பொதுவான நான்கு ராஜ வீதிகளையே வலம் வருகிறார்கள். இந்த மூர்த்திகளை நாம் பிரதட்சிணம் பண்ணி நமஸ்கரிக்கிறோம். வீதி உலா என்று நாம் நடத்துகிற இந்த உத்ஸவங்களிலோ இந்தத் தெய்வ மூர்த்திகள் எல்லாரும்கூட — சைவ வைஷ்ணவ பேதமில்லாமல் அத்தனை மூர்த்திகளும் — வேறு ஒரு மூர்த்தியைப் பிரதக்ஷிணம் பண்ணுகிறார்கள். அப்படி ஏகாம்ரேசுவரர், வரதர் இன்னும் மற்ற அத்தனை மூர்த்திகளும் யாரை வலம் வருகிறார்கள்? இந்த நாலு ராஜ வீதிகளுக்கும் மத்தியில் காமகோட்டத்தில் கோயில் கொண்டிருக்கிற சாக்ஷாத் ராஜ ராஜேசுவரியான காமாக்ஷியைத்தான்! இந்த ஊருக்கே நாலு பக்கமும் கோபுரங்களைக் கொண்டதாக இருக்கிற ஆலயத்தில் அமர்ந்திருக்கிற காமாக்ஷிதான் மையமாக இருக்கிறாள். லோகத்துக்கே மையமான நாபி ஸ்தானத்தில் இருக்கிற காம கோட்டம் இந்த நகரத்துக்கும் மையமாக இருக்கிறது. தொப்புள் கொடி வழியாகக் குழந்தைக்குச் சம்ரக்ஷணை நடக்கிற மாதிரி, சகல மக்களையும் தன் மக்களாகக் கொண்ட அம்பாள் அவர்களைச் சம்ரக்ஷித்து அநுக்கிரஹிக்க இங்கே இப்படிக் காமாக்ஷியாக உட்கார்ந்திருக்கிறாள்.

அம்பாளுக்கான மகா க்ஷேத்திரங்கள் பல இருக்கின்றன. அவற்றில் பல இடங்களில் ஸ்ரீசக்கரப் பிரதிஷ்டையும் உண்டு. சாதாரணமாக மூர்த்தி இருக்கிற பீடத்தின் அடியிலேயே மறைவாக இருக்கும். சில இடங்களில் வெளியிலும் ஸ்ரீ யந்திரம் இருக்கும். ஆனால் இங்கே காமகோட்டத்தில்தான் இத்தனை விசேஷமாக ஸ்ரீ சக்ரம் அம்பாள் சந்நிதானத்தில் இருக்கிறது. செய்கிற அர்ச்சனையெல்லாம் அதற்குத்தான். மதுரையில், திருஆனைக்காவில், கன்யாகுமரியில் எல்லாம் அம்பாள் பரம சாந்நித்தியமாக இருப்பது வாஸ்தவம். அங்கெல்லாமும் அநுக்ரகத்துக்கு ஒரு குறைச்சல் இல்லை. ஆனால் ஸ்ரீ வித்யா அதிதேவதையாக, லலிதா திரிபுரசுந்தரி, ராஜராஜேசுவரி என்றெல்லாம் சொல்லப்படுகிற மூர்த்திக்குரிய சகல லக்ஷணங்களோடு, இப்படிக் கரும்பு வில், புஷ்ப பாணம், பாசம், அங்குசம் இவற்றைத் தாங்குகிற சதுர்புஜ மூர்த்தியாய் அமர்ந்த திருக்கோலத்தில் இருக்கிறவள் ஜகன்மாதா காமாக்ஷிதான். தனக்கென்றே நாலு பக்கமும் கோபுர வாசல்களுடன், தனியாக ஈசுவர சந்நிதியில்லாமல் கோயில் கொண்டு, ஆறுகால பூஜைகளைப் பெற்று, அநுக்கிரக மூர்த்தியாக இருக்கிற விசேஷம் இந்தக் காஞ்சி காமாக்ஷிக்குத்தான் இருக்கிறது. காஞ்சியில் பல ஆலயங்கள் இருந்தாலும் ''காஞ்சி காமாக்ஷி'' என்றே லோக வழக்கும் இருக்கிறது. (தொடரும்)

# நீ தான் கதாநாயகி!

முருகு முன்னவன்

'டி.....ரி.....ங்.....'

''நிரஞ்சன் ஹியர்!''

''குட் மார்னிங் நிரஞ்சன். நான் 'குறிஞ்சி' ஆசிரியர் ஆனந்தம் ஹியர். கதையை எழுதி முடித்து விட்டீர்களா? ஆபீஸ் பையனை வீட்டுக்கு அனுப்பட்டுமா?''

''வெரி சாரி சார்... இன்னும் கதையை எழுதவே தொடங்கவில்லை!''

''என்ன ஸார் நீங்க! உங்க படைப்பு எங்க ஆண்டு மலரில் வெளிவர்றதா அறிவிப்புக் கூடக் கொடுத்து விட்டோமே. இன்னைக்குத் தேதி இருபத்திரண்டு. இப்பவே கம்போசுக்கு அனுப்பினால்தானே குறித்த நேரத்தில் ஆண்டு மலரை வெளியிட முடியும்? அது இருக்கட்டும். நீங்கள் ஏன் இன்னும் எழுதத் தொடங்கவில்லை? எங்கள் 'குறிஞ்சி'யிலே எழுதறதுக்கு உங்களுக்குப் பிடிக்கவில்லையா, என்ன?''

''நோ, நோ... அப்படி ஒன்றுமில்லை. உண்மையைச் சொல்லப் போனால் என்னைப் புகழ் பெற்ற எழுத்தாளனாக்கிய பெருமையில் உங்கள் பத்திரிகைக்கு நிறையப் பங்குண்டு. ஆமாம், என்ன விதமான கதையை என்னிடம் எதிர்பார்க்கிறீர்கள்?''

''நல்ல கேள்வி சார்! வழக்கமான காதல் கதைதான்!''

என்னுடைய பதிலுக்குக் காத்திருக்க அவருக்குப் பொறுமை இல்லை.

'ரியலிஸ்டிக் லவ்' என்பது என்ன? அது தெய்விகக் காதலின் வரிசையில் சேருமா? அல்லது இன்றைய உலகில் நாம் காணும் காதலைப் பற்றி எழுதும் கதைதான் ரியலிஸ்டிக் லவ் ஸ்டோரியா? புரியவில்லை எனக்கு. எனினும் காதலர்கள் எத்தனை பேரை என் வாழ்க்கையில் சந்தித்திருக்கிறேன். அவர்களில் யாரேனும் ஒரு ஜோடி ஏன் எனக்கு 'பிளாட்' தரக் கூடாது? சரி... இன்று காலையிலிருந்து மாலைவரை நான் சந்திக்கப் போகிறவர்கள் — காதல் சம்பந்தப்பட்டவர்கள் யாரேனும் — ஒரு 'பிளாட்'டை என் மூளையில் உதிக்க வைக்கிறார்களா, பார்ப்போமே...

அலுவலகத்துக்குப் புறப்படுகிறேன். நான் தங்கியிருப்பது மில்லர்ஸ் ரோட்டில் சட்டக் கல்லூரி அருகே அமைந்த பங்களாவின் அவுட் ஹவுஸில். கதவுகளை இழுத்து மூடி விட்டு வெளிக் கேட்டை நெருங்கும்போது...

''குட் மார்னிங் நிரஞ்சன் அண்ணா...! ஆபீசுக்கா?''

வாசலில் உட்கார்ந்தவாறே கேட்கிறாள், பங்களா சொந்தக்காரரின் ஒரே மகள் புவனா. ராணி மேரி கல்லூரியில் ஓராண்டு பி.யூ.சி.யை இரண்டாண்டு இண்டர்மீடியட்டாக எண்ணிக் கொண்டு மார்ச்சுக்கும் செப்டம்பருக்கும் மாறி மாறிச் சென்று கொண்டிருக்கிறாள். பாவம், பத்திரிகைக்காரர்களுக்கு அவள் மேல் என்ன கோபமோ? ஒவ்வொரு தடவையும் 'ரிசல்ட்' வெளியிடும்போது அவள் நம்பரைப் பிரசுரிப்பதில்லை!

இவளைப் பற்றி ஏன் ஒரு காதல் கதை எழுதக் கூடாது? கல்லூரிக்குப் 'படிக்க' மட்டும் சென்ற பெண்





அல்லவே இவன்! அது ஏற்கனவே எனக்குத் தெரிந்ததுதானே?

அது ஒரு சனிக்கிழமை. அலுவலக விஷயமாக 'எழிலகம்' வந்தவன் மெரினா ஹோட்டலில் தேநீர் குடிக்க நுழைந்தபோது..

மதிய வேளையில் வெறிச்சோடிக் கிடந்த மெரினா ஹோட்டலில் ஓர் ஓரத்தில் அமைந்திருந்த இருக்கையில் இருப்பது புவனாவா... அவள் அருகே அமர்ந்திருக்கும் அந்தக் கிருதா யார் அவன்? வகுப்புக்கு டிமிக்கி கொடுத்து விட்டு எவனோ ஒருத்தனுடன் சுற்றும் அளவுக்குத் துணிச்சல் கல்லூரியில் காலடி எடுத்து வைத்ததும் வந்து விடுகிறதா? என்னுடைய வருகையை அவளுக்குக் காட்டிக் கொள்வதை மறைப்பதுதான் உசிதம் என்றெண்ணி அவளுக்கு முதுகுப்புறத்தைக் காட்டி அமர்ந்து ஒரு தேநீர் விழுங்கிவிட்டு ஓசைப்படாமல் வெளியேறிவிட்டேன்.

அன்று மாலை அலுவலகத்திலிருந்து திரும்பும்போது, வழக்கத்துக்கு மாறாக வாசலில் நின்றவாறே அசட்டுச் சிரிப்பைப் புவனா ஏன் உதிர்க்க வேண்டும்?

''என்ன அண்ணா! அதற்குள் ஆபீஸ் முடிஞ்சுட்டதா?''

அவுட்ஹவுசுக்குள் நுழைந்த என்னைத்

# போட்டிக்கதை—18

தொடர்ந்து வந்த அவள், ''அண்ணா! அப்பாவும் அம்மாவும் ஒரு ரிசப்ஷனுக்குப் போயிட்டாங்க..'' என்றாள்.

''அதுக்கு என்ன வந்தது இப்போ?''

அவள் கண்கள் கலங்குகின்றன.

''அண்ணா...! இனியும் நீங்க நடிக்காதீங்க! இன்னிக்கு என்னை ஹோட்டலில் பார்த்தது பற்றித் தயவுசெய்து டாடியிடம் சொல்லிடாதீங்க... இனிமேல் இப்படி நடந்துக்கவே மாட்டேன்.''

அவள் தாரை தாரையாகக் கண்ணீரைக் கொட்டுகிறாள்.

''அசடு! இப்போ என்ன நடந்துட்டுதுன்னு அழறே. உங்க அப்பாவிடம் உன்னை ஹோட்டலில் பார்த்தது பற்றி நிச்சயமாகச் சொல்ல மாட்டேன். ஆனால் ஒன்று மட்டும் நீ நினைவில் வைத்துக் கொள். பெற்றோர்கள் நமக்கு அளிக்கும் சுதந்திரம் நம் விருப்பம் போல் செல்வதற்கு அளிக்கப்பட்ட லைசென்ஸ் என்று மட்டும் எண்ணாதே... அவனுடன் நீ

பழகக் கூடாதுன்னு சொல்ல மாட்டேன்... ஆனால் உன் படிப்பைப் பாழாக்காதே!''

புடவைத் தலைப்பால் கண்களை ஒத்திய வாறே அவள் சென்று விட்டாள். இவளைப் பற்றி ஒரு காதல் கதை எழுதலாம். ஆனால் அது 'ரியலிஸ்டிக் லவ்'வாக இருக்க முடியுமா? தான் ஒருவனுடன் ஹோட்டலில் சாப்பிட்டுக் கொண்டிருந்ததை அவளுக்குச் சிறிதும் தொடர்பில்லாத நான் கண்ட உடனேயே தன் காதலைக் கைகழுவி விடுகிறேன் என்று சத்தியம் செய்த இவள் காதல் உண்மைக் காதலா?

ஹோட்டல் கார்டன் பஸ் ஸ்டாண்ட். அதுதான் நான் தினமும் பல்லவனை மடக்கும் போர்க்களம்.

அங்கே வழக்கமாக நான் சந்திக்கும் ஒரு ஜோடி. மிகவும் ரசமான நாடகம். கியூவில் நிற்காமல் டிக்கட் வாங்காமல் நான் ரசிக்கும் ருசிகர நாடகம்.

இந்தக் காதல் நாடகம் மூன்று மாதங்களாக நடந்து வருகிறது. இவர்களைப் பற்றி ஒரு காதல் கதை எழுதலாம். ஆனால் இவர்கள் காதல் உண்மைக் காதலா?

அவள் தெருக் கோடியில் வரும்போதே சிகரெட்டை அணைத்து வாயைத் துடைத்துக்கொண்டு தன்னிடமுள்ள புகை பிடிக்கும் பழக்கத்தை அவளிடம் மறைக்க முயலும் இவன் இன்னும் எத்தனை உண்மைகளை மறைத்திருக்கிறானோ?

என்னுடைய பஸ் வருகிறது. புளி மூட்டை அடைசலான பஸ்ஸில் நானும் தொற்றிக் கொள்கிறேன். பஸ்ஸை விட்டு இறங்கும் போது...

''குட் மார்னிங் நிரஞ்சன்!''

திரும்புகிறேன். அழைத்தவள் என் சக ஊழியை பிரபா!

ஒரு மாத லீவில் சொந்த ஊருக்குச் சென்றிருந்தவள் இன்று மீண்டும் ஆபீசுக்கு வருகிறாள் போலும்!

''என்ன, பிரபா! எப்போது ஊரிலிருந்து வந்தீர்கள்?''

''நேற்றே வந்து விட்டேனே!''

பேச்சின் நடுவே தற்செயலாக என் பார்வை அவள் கழுத்திலிருந்த மஞ்சள் கயிற்றில் பதிந்தபோது... இவளுக்குத் திருமணம் ஆகிவிட்டதா... திருமணத்துக்காகத் தான் தன் சொந்த ஊருக்குச் சென்றாளா...?

''வெரி சாரி நிரஞ்சன். உங்களுக்கெல்லாம் அழைப்பு அனுப்ப முடியாமல் போய் விட்டது. திடீரென்று திருமணம் நிச்சயம் பண்ணி விட்டார்கள். அவருக்கு டில்லியில் வேலை. பி.இ. எலெக்ட்ரானிக்ஸ்... தூரத்து உறவு...''

''ஓ! கன்கிராஜுலேஷன்ஸ்!''

''தேங்க்...யூ. கல்யாணத்துக்கு அழைக்கா விட்டாலும் இன்றைக்கு அசோகாவில் ரிசப்ஷன் வச்சிருக்கோம். நீங்க கண்டிப்பாகக் கலந்துகொள்ள வேண்டும். நேற்றே எல்லோருக்கும் அழைப்பிதழைக் கொடுத்து விட்டேன். நீங்க லீவில் இருந்ததால் உங்களுக்கு நேற்றுக் கொடுக்க முடியவில்லை.''

அவள் நீட்டிய வெண்ணிற உறையைப் பெற்றவாறே, ''எல்லோரையும் ரிசப்ஷனுக்கு அழைத்திருக்கிறீர்களா பிரபா?'' என்றேன்.

'எல்லோரையும்' என்ற வார்த்தையை நான் வேண்டுமென்றே அழுத்திச் சொன்னேன். அந்த 'எல்லோரில்' முரளி — பிரபாவின் காதலன் — அவனும் அடங்குவான்.

''நீங்கள் பொடி வைத்துப் பேசுவது எனக்குப் புரிகிறது நிரஞ்சன். முரளி 'ஆஃப்டர் ஆல் வித் ரெபரன்ஸ் டு யுவர் லெட்டர் சைடட்' என்று எழுதுகிற ஆர்டினரி அசிஸ்டெண்ட்தானே... வெல் ஹும்... அதோ பஸ் புறப்படப் போகிறது. நான் வரட்டுமா?''

அலுவலகத்தை நோக்கி நடக்கிறேன்.

பிரபா சொல்கிறாள், முரளி ஆர்டினரி அசிஸ்டெண்ட்தானே என்று! பிரபா, நீயா அப்படிச் சொல்கிறாய்? தினம் தினம் அவனுடன் பீச், நாடகம், சினிமா என்று சுற்றிய வேளை — ஒவ்வொரு ஞாயிற்றுக் கிழமையும் பனகல் பார்க்கில் சந்திக்கிற வேளை - அலுவலகத்தில் அவன் அறுவைகளைக்கூடப் பெரிய ஜோக்காக எடுத்துக் கொண்டு வானமே இடிந்து விழும் அளவுக்குச் சிரிக்கும் வேளை— ஆர்டினரியாகத் தோன்றாத அவன் ஓர் இஞ்சினியர் முன்னால் 'ஆர்டினரி'யாகத் தோன்றி விட்டான். இல்லை?

இவளைப் பற்றி ஒரு கதை எழுதினால் என்ன? இப்படியும் ஒரு பெண்ணா என்று படிப்பவர்கள் நினைக்கக்கூடும். ஆனால் காதல் கதைகளில் பெண்களைத் தியாகச் சின்னங்களாக, உருகும் மெழுகுவர்த்திகளாகப் படைத்துப் பழக்கப்பட்ட நமது சிறுகதை உலகம் நிச்சயம் பிரபாவின் கதையை ஏற்றுக் கொள்ளாது.

என் செக்ஷன் மூன்றாவது மாடியில்.

அங்கு போய் மின்விசிறியை நான்காவது பாயிண்டில் சுழல விட்டு விட்டுச் சீட்டில் அமர்கிறேன்.

ஆபீஸ் பைலில் சிந்தனை செல்லவில்லை. இன்னும் ஒரு கதைக்குப் பிளாட் கிடைக்கவில்லையே என்ற கவலையை விட முரளியை நினைத்தபோது நான் மிகவும் வேதனையுற்றேன். சரியாகப் பத்து மணிக்கு ஆபீசுக்கு வந்தவுடன் ஒரு சிகரெட்டை ஊதி முடித்து விட்டுப் பத்தே காலுக்கு இருக்கையில் அமரும் அவனை ஏன் இன்னும் காணோம்? மணி பத்து முப்பது.

''நிரஞ்சன்! உன்னிடம் முக்கியமான ஒரு விஷயம் பேச வேண்டும். கேண்டீன் வரை வர்றியா?''

அவன் பிரபாவைப் பற்றிக் கூறத்தான் அழைக்கிறான் என்று எனக்குத் தெரியும்.

கேண்டீனில் சென்று அமர்ந்ததும், ''நிரஞ்சன், பிரபாவுக்கு கல்யாணம் நடந்து விட்டது. தெரியுமா உனக்கு?'' என்றான்.

''தெரியும்.''

''இப்படிப் பச்சைத் துரோகம் செய்வாள் என்று நான் கனவிலும் நினைக்கவில்லை....!''

''ஏதோ திடீரென்று முடிவான திருமணம் என்று சொல்கிறாளே.''

''கத்தப் பொய். எங்கே நமக்குத் தெரிந்தால் நான் அவள் கல்யாணத்தை நிறுத்தி விடப் போகிறேனோ என்ற பயம். ஒருவருக்கும் அழைப்பு அனுப்பாமல் கல்யாணத்தை

National நிப்போ

கசிவுத்தடுப்புள்ள பேட்டரிகள்

# அதிக காலம் நீடித்திருக்கும் அபார சக்தி

நிப்போ ஹைப்பர், ஹை டாப் பேட்டரிகளிலே எலக்ட்ரோலிட்டிக் மேங்கனீஸ் டைஆக்ஸைடு கூடுதலாகச் சேர்க்கப்பட்டுள்ளதால், பேட்டரி சக்தியும் ஆயுளும் பெருகுகின்றன, மின் கசிவு நேருவது அற்பசொற்பமே.

உலோகப் பாதுகாப்பு

காப்புரிமை கொண்ட கசிவுத் தடுப்புள்ள நிர்மாண அமைப்புடைய நிப்போ பேட்டரிகள், உங்கள் கருவிகளுக்குக் கேடான கசிவைத் தடுத்திடும் பொருட்டு, உட்புறத்தில் வினைல் கேஸிங்கு பொருந்திய உலோக ஜாக்கெட் உடையவை.




ஜப்பான் நாட்டு நேஷனல் கம்பெனியின் தொழில்நுட்பம்

தயாரிப்பாளர்கள் : இண்டோ நேஷனல் லிட்.

everest/939a/INL-tn.

# ஆஹா! இதுதான் செளந்தர்யம்!
# இயற்கையாகவேயா?

அந்த ரகசியம், இயற்கையாய்ப் பொருந்துவதில் சிறந்த ஸாடின் க்ளோவைச் சரியாய்ப் போட்டுக் கொள்ளும் முறையில் உள்ளது.

**முன்பு: யாருமே அவளை கவனிப்பதில்லை.**
ராதா, கண்ட மேக்கப்புகளைப் போட்டுக் கொண்டு, மிகச் சாதாரணமாய் இருந்தாள். பிறகு தோழி ஒருத்தி, சிறந்த மேக்கப்பைத் தேர்ந்தெடுக்கவும், சரியாய் மேக்கப் செய்து கொள்ளவும், கற்றுக் கொடுத்தாள். அவளுக்கு ஏற்ற நிறம் ஸாடின் க்ளோவில் கிடைத்தது.



**சரியான மேக்கப் முறையைக் கற்றிடுங்கள்**
இரகசியம்: ஸாடின் க்ளோ சிறிதே எடுத்து, புள்ளி புள்ளியாய் முகத்தில் இட்டுக் கொள்ளுங்கள். பிறகு அதை முகத்திலும், கழுத்திலும் நெடுகத் தடவி விடுங்கள். எங்காவது அதிகமாயிருந்தால் ஒத்தி சமமாக்குங்கள். முகத்தில் பளபளப்பில்லாதிருக்க, பொருத்தமான நிறத்தில் லக்மே முகப் பவுடர் உபயோகியுங்கள். எடுப்பாய் விளங்க, ராதா உபயோகிப்பது க்ளோதான்.



**பின்பு: "ஓ! யார் இந்த ரூப சுந்தரி"!**
ராதாவேதான்! காரணம், ஸாடின் க்ளோ இணைந்து சமமாய்ப் பரவுகிறது. மாசுமறுக்களை மறைத்து விடுகிறது. அழகி ராதா, நூதனழகும், தன்னம்பிக்கையும் பெற்று, முகக் காந்தியுடன் விளங்குகிறாள்.



# லக்மே
## ஸாடின் க்ளோ லிக்விட் மேக்கப்

இந்தியரின் மேனி நிறத்திற்கு ஏற்ற முறையில் ஏழு நிறங்களில் தயாரிக்கப் பட்டவை.




RADEUS/L-121

முடித்துவிட்டு ரிசப்ஷனுக்கு மட்டும் அழைத்திருக்கிறாள்!''

''உனக்கும் அழைப்புக் கொடுத்தாளா?''

''எப்படிக் கொடுப்பாள்? எந்த முகத்தோடு கொடுப்பாள்?''

''சரி. மனத்தை அலட்டிக்கொள்ளாதே.''

''எனக்கு இன்று வேலை செய்யவே 'மூட்' இல்லை நிரஞ்சன். நான் இப்படியே வீட்டுக்குப் போகிறேன். என் மேஜை மேல் என் டைரியும் ஒரு லைப்ரரி புத்தகமும் இருக்கின்றன. அவற்றை எடுத்து வைத்திரு.''

விரக்திப் புன்னகையை வழிய விட்டவாறு அவன் விடை பெற்றான். நேரம் ஓடிக்கொண்டிருந்தது. மணி மூன்று முப்பது.

பிரபா அளிக்க இருக்கும் ரிசப்ஷனில் கலந்து கொள்வதைக் காரணமாகக்கொண்டு சிலர் அனுமதி பெற்று, சிலர் அனுமதி இன்றி அலுவலகத்தை விட்டு ஒரு மணி நேரம் முன்னதாகவே சென்று விட்டனர். என்றாலும் அங்கொருவரும் இங்கொருவருமாகச் சிலர் இருந்தார்கள்.

அப்பொழுதுதான் தன் மேஜை மீது வைத்திருக்கும் டைரியையும் லைப்ரரி புத்தகத்தையும் எடுத்துப் பத்திரப்படுத்தி வைக்குமாறு முரளி கூறியது என் நினைவுக்கு வந்தது.

அவன் மேஜை மீது மின் விசிறியின் காற்றில் துடிதுடித்துக் கொண்டிருந்த டைரியையும் புத்தகத்தையும் எடுத்தபோது... கீழே விழுவது... யாருடைய புகைப்படம்?...

பிரபாவுடையதா?

இல்லை...அப்படியானால்.. புகைப்படத்தை உற்று நோக்குகிறேன். அதிலிருப்பது சாரதாவா? போன மாதம் ஒரு லீவ் வேகன்சியில் அமர்த்தப்பட்ட சாரதாவா? 'வித் லவ் டு முரளி' என்ற குறிப்புடன் அவனுடைய கையெழுத்து வேறு! சே! இவனைப் பற்றிக் காதல் கதை எழுத என் பேறு கூசும்.

மீண்டும் என் இருக்கையில் அமர்ந்து கொண்டு, கலங்கிக் குட்டையாக இருக்கும் என் எண்ணக் குளத்தில் கருத்து மீனை வலை போட்டுத் தேடிக் கொண்டிருக்கும்போது...

''என்ன சார்...! பிரபாவின் பார்ட்டிக்கு நீங்கள் போகவில்லையா?''

திரும்பிப் பார்க்கிறேன். என்ன விந்தை! என்னருகே நிற்பவள் 'டி. செக்ஷன் டைப்பிஸ்ட்' வித்யாவா?

அவள் பெயர்தான் அழகே தவிர அவளுக்கும் அழகுக்கும் சிறிதும் சம்பந்தம் கிடையாது. அவசரத்தில் ஆண்டவன் படைத்த அணங்கு என்று அவளை இந்த அலுவலகத்தில் பணிபுரியும் பலர் அவள் எதிரிலேயே கூறியதைப் பல முறை கேட்டிருக்கிறேன். அவலட்சணத்தின் நேரடி வாரிசாக இருக்கும் அவளிடம் சிரித்துப் பேச எவரும் கிடையாது.

''போக வேண்டும் வித்யா. ரிசப்ஷன் மாலை ஐந்து மணிக்குத்தானே. இப்படியே ஆபீசிலிருந்து நேரே சென்று விட்டால் ஆயிற்று! ஆமாம் நீங்கள் ரிசப்ஷனில் கலந்து கொள்கிறீர்களா?''

''எனக்கு இன்விட்டேஷனே இல்லாத போது, அழையாத வீட்டில் நுழைகிற நாயா நான்?''

வித்யாவுக்கு அழைப்புக் கிடையாதா? அவளும் ஒரு பெண்தானே? இந்த அலுவலகத்தில் ஓர் ஊழியைதானே? அவளுடைய சீட்கூட பிரபாவின் அருகேதானே அமைந்துள்ளது? பிரபா என்ன அவ்வளவு கல் நெஞ்சக்காரியா?

## குழந்தைகள் மகாநாடு!



ஆண்டுதோறும் பெங்களூரில் ஒரு குழந்தைகள் மாநாடு நடக்கிறது. இதில் தலைமை வகிப்பது, பேசுவது எல்லாம் குழந்தைகளே! அமைச்சர்களும், மேயர்களும், விருந்தினர்களாகக் கலந்து கொள்கிறார்கள். இந்த தடவை நடந்தது 25வது மாநாடு.

டெக்கான் ஹெரால்ட் -பாலி

---

''பிரபா ஏன் அழைப்புக் கொடுக்கவில்லை? ஒருவேளை அவசரத்தில் மறந்திருக்கலாம்!''

''பிரபா மட்டுமா? இந்த ஆபீசில் எங்க செக்ஷன் ஜூனியர் அஸிஸ்டெண்டிலிருந்து எம். டி. வரை என்னை ஏதோ ஓர் அலட்சியத்துடன்தான் நடத்துகிறார்கள். அதற்குக் காரணம், உங்களைப் போன்ற கதாசிரியர்களுக்கு நான் சொல்லித் தர வேண்டியதில்லை. என்னை அலட்சியப்படுத்துகிறார்கள் என்ற காரணத்துக்காக எனக்குத் துளியும் வருத்தம் கிடையாது. அழகான, சுவை மிக்க மாம்பழமாக இருந்து, வீதியில் வருபவன் போகிறவன் எறிகிற கல்லடிகளைத் தாங்குவதை விட எவரும் விரும்பாத எட்டிக் காயாகவே நான் இருந்து விடுகிறேன். கண்ணைக் கவரும் கிளியாக இருந்து கொண்டு கூட்டினுள் அடைபட்டு வேடிக்கைப் பொருளாக மாறுவதை விடச் சுதந்திரமாக வானில் திரியும் காக்கையாகவே நான் இருந்து விடுகிறேன். எனக்குத் தேவை தனிமை. அதில் கிடைப்பது சுதந்திரம் மட்டுமல்ல. ஒரு தனிச் சுகமும் கூட. லீவ் இட்...எதையோ கேட்க வந்த நான் எதைப் பற்றியோ பேசிக் கொண்டிருக்கிறேன். 'குறிஞ்சி' ஆண்டு மலரில் உங்கள் கதை வெளிவருவதாக அறிவிப்புப் பார்த்தேன். எழுதிவிட்டீர்களா?''

''இல்லை வித்யா... இனிமேல்தான் எழுத வேண்டும்.''

அவள் சென்றுவிட்டாள்.

டெலிபோன் எண்களைச் சுற்றுகிறேன்.

''குறிஞ்சி ஆசிரியர் ஆனந்தமா? நான் நிரஞ்சன்.''

''என்ன சார், கதை ரெடியா?''

''உங்கள் ஆபீஸ் பையனை நாளைக் காலை பத்து மணிக்கு வரச் சொல்லுங்கள். ஒரு காதல் கதை எழுதி அனுப்பிவைக்கிறேன்.''

''ரொம்ப நன்றி சார்!''

டெலிபோனை மீண்டும் பொருத்திவிட்டு அலுவலகத்தை விட்டுக் கிளம்புகிறேன்.

வித்யா... யாராலும் காதலிக்கப்படாத, யாரையும் காதலிக்காத நீதான் நான் எழுதப் போகும் காதல் கதையின் கதாநாயகி!




### முப்பத்தேழாம் அத்தியாயம்

## புலிகேசியும் சிவகாமியும்

சத்ருக்னன் கூறி வந்த வரலாற்றில் முன்சொன்ன இடத்துக்கு வந்ததும் மாமல்லருக்கு மூச்சு நின்றுவிடும் போல் இருந்தது. மேலே நடந்ததைத் தெரிந்து கொள்ள அவர் அவ்வளவு ஆவலாயிருந்தார். ஒரு கண நேரத்துக்குள் அவருடைய மனம் என்னவெல்லாமோ கற்பனை செய்தது. சத்ருக்னனும் சிவகாமியும் புறப்பட்டு ஓடி வந்திருக்க வேண்டும் என்றும், மறுபடியும் வழியில் அவளுக்கு ஏதாவது ஆபத்து ஏற்பட்டிருக்க வேண்டும் என்றும் நினைத்தார். அவளை அந்த ஆபத்திலிருந்து மீட்டுக் கொண்டு வருவதற்கு அவருடைய உள்ளம் துடிதுடித்தது.

''சத்ருக்னா! ஏன் இப்படிக் கதையை வளர்த்திக் கொண்டிருக்கிறாய்? சிவகாமியை எங்கே விட்டுவிட்டு வந்தாய்? சீக்கிரம் சொல்லு'' என்று ஆத்திரத்துடன் கேட்டார்.

''பிரபு, சிவகாமி அம்மை இப்போது வடபெண்ணை நதிக்கு அப்பால் போய்க் கொண்டிருப்பார்! பொன்முகலி ஆற்றுக்கும் வடபெண்ணைக்கும் மத்தியில் அவரை நான் விட்டுவிட்டு வந்தேன். அந்த ராட்சதன் புலிகேசியிடம்தான் விட்டு விட்டு வந்தேன். பாவி!'' என்று சத்ருக்னன் துயரக் குரலில் கூறினான்.

மாமல்லரின் கண்களில் தழற்பொறி பறந்தது. புலிகேசியிடம் வந்த கோபத்

தைக் காட்டிலும் சத்ருக்னனிடம் அதிகக் கோபம் அவருக்கு வந்த தாகத் தோன்றியது.

''இதென்ன? சிவகாமியைப் புலி கேசியிடம் விட்டு விட்டு நீ மட்டும் தப்பி வந்தாயா? சத்ருக்னு! என்னிடம் விளையாட வேண்டாம். சீக்கிரம் விஷயத்தைச் சொல்!'' என்று கர்ஜனை புரிந்தார்.

அப்போது ஆயனர், மாமல்லருக்குக் காரணம் விளங்காத உற்சாகம் நிறைந்த குரலில், ''பிரபு! சத்ருக்னன் சொல்கிறபடி சொல்லி வரட்டும். தயவுசெய்து சற்றுப் பொறுமையாகக் கேளுங்கள்!'' என்றார். சத்ருக்னன் மறுபடியும் சொல்லத் தொடங்கினான்:

''சிவகாமி அம்மை உடனே என்னுடைய யோசனையைச் சந்தோஷமாய் ஒப்புக் கொண்டு தப்பிச் செல்ல இணங்குவார் என்று எதிர்பார்த்தேன். இதில் பெரும் ஏமாற்றம் அடைந்தேன். அது வரையில் தைரியமாயிருந்த சிவகாமி அம்மை என்னுடைய யோசனையைக் கேட்டதும் திடீரென்று விம்மி அழத் தொடங்கினார். முகத்தைக் கைகளால் மூடிக் கொண்டு தேம்பினார். எனக்கு ஒன்றும் புரியவில்லை. அவரைச் சமாதானப்படுத்த முயன்றேன். அப்போது சிவகாமி அம்மை என்னை வெறித்துப் பார்த்து, 'அவருடைய வாக்குறுதியை நம்பி இந்தக் கதி அடைந்தேன்' என்றார். உடனே, 'இல்லை, இல்லை. அவர் பேச்சைக் கேளாததால் இந்த விபரீதம் வந்தது. இனி அவருடைய முகத்தில் எப்படி விழிப்பேன்?' என்றார். இன்னும் என்னவெல்லாமோ சம்பந்தமற்ற வார்த்தைகளைச் சொன்



ளர். இதனாலெல்லாம் என் திகைப்பு அதிகமாயிற்று. ஒருவேளை அவருக்குச் சித்தப் பிரமை ஏற்பட்டுவிட்டதோ என்று மிகவும் பயந்து போனேன். பிறகு சளுக்கர் படைகள் நம் கிராமங்களில் செய்த அட்டூழியங்களைத் தம் கண்களால் பார்த்தது பற்றிச் சிவகாமி



அம்மை சொல்ல ஆரம்பித்தார். அப்புறந்தான் அவருடைய அறிவுத் தெளிவைப் பற்றி எனக்கு ஏற்பட்ட சந்தேகம் நீங்கிற்று. அவர் சொன்னவற்றையெல்லாம் சிறிது நேரம் நான் பொறுமையாய்க் கேட்டேன். பிறகு, 'அம்மா! மகேந்திர பல்லவரும் மாமல்லரும் இதற்கெல்லாம் பழிக்குப் பழி வாங்குவார்கள்!' என்றேன். அப்போது சிவகாமி அம்மைக்கு ஏற்பட்ட ஆத்திரத்தையும் ஆவேசத்தையும் பார்க்க வேண்டுமே? 'ஆம், சத்ருக்னா! ஆம்! பழிக்குப் பழி வாங்கியே தீர வேண்டும்' என்று அவர் அப்போது போட்ட கூச்சலினால் காவலர்கள் சந்தேகம் கொள்ளாமல் இருக்க வேண்டுமே என்று எனக்குப் பயமாய்ப் போய்விட்டது. நல்லவேளையாக அங்கே ஸ்திரீகள் பலர் தூக்கத்திலே புலம்புவதும் பிதற்றுவதும் சகஜமாயிருந்தபடியால், சிவகாமி அம்மையின் கூச்சல் காவலர்களின் கவனத்தைக் கவரவில்லை.

''பிறகு நான் அவரை மெள்ள மெள்ளச் சாந்தப்படுத்தினேன். மறுபடியும் தப்பிச் செல்லும் யோசனையைக் கூறினேன். அப்போது அவர் என்னை வெறித்துப் பார்த்து, 'ஐயா! உண்மையாகவே என்னைத் தப்பி வரச் சொல்கிறீரா? இங்கே என்னைப் போல் ஆயிரம் பெண்கள் இருக்கிறார்கள். இவர்களில் சிலர் கட்டிய புருஷனை விட்டு விட்டு வந்திருக்கிறார்கள். சிலர் கைக் குழந்தைகளைக் கதற விட்டுவிட்டு வந்திருக்கிறார்கள். இவர்களை எல்லாம் அந்தச் சளுக்க ராட்சதர்கள் கொண்டு போகும்படி விட்டு விட்டு நான் மட்டும் தப்பிச் செல்ல வேண்டுமா? எனக்குத் தாலி கட்டிய கணவன் இல்லை; வயிற்றில் பிறந்த குழந்தையும் இல்லை. நான் எக்கேடு கெட்டுப் போனால் என்ன? என்னை விட்டுவிடுங்கள். இங்குள்ள கைக் குழந்தைக்காரிகளில் யாராவது ஒருத்தியை அழைத்துப் போங்கள். உங்களுக்குப் புண்ணியம் உண்டாகும்' என்றார். என் மனமும் இளகிவிட்டது. ஆயினும் மனத்தைக் கெட்டிப்படுத்திக் கொண்டு, 'அம்மா! மகேந்திர சக்கரவர்த்தி எனக்கு இட்ட கட்டளை தங்களைப் பத்திரமாய் அழைத்து வர வேண்டும் என்பதுதான். நான் சக்கரவர்த்தியின் ஊழியன். அவருடைய கட்டளையை நிறைவேற்ற வேண்டியவன்' என்றேன். இதனால் அவருடைய மனம் மாறாது என்று எனக்குத் தெரிந்தேயிருந்தது. ஆதலின், மறுபடியும், 'அம்மா! உங்களுக்குப் புருஷனில்லை, குழந்தை இல்லை என்பது உண்மைதான். ஆனால் தந்தை

ஒருவர் இருக்கிறார் அல்லவா? ஏக புத்திரியாகிய தங்களைப் பிரிந்து அவருடைய மனம் என்ன பாடுபடும்? அதை யோசிக்க வேண்டாமா?' என்றேன்.

''சிவகாமி அம்மையின் கண்களில் அப்போது கண்ணீர் துளித்தது. தழுதழுத்த குரலில், 'ஆம்! என் தந்தைக்குப் பெரிய துரோகம் செய்துவிட்டேன். ஐயோ! அவர் பிழைத்தாரோ, இல்லையோ?' என்றார். 'அம்மா! அவரைப் பிழைப்பிக்க விரும்பினால் நீங்கள் உடனே என்னுடன் புறப்பட வேண்டும்!' என்றேன் நான். சிவகாமி அம்மை மறுபடியும் முகத்தைக் கையால் மூடிக் கொண்டு விம்மினாள். சீக்கிரம் கையை எடுத்துவிட்டு, 'ஐயா!



இன்று ஒரு நாளைக்கு எனக்கு அவகாசம் கொடுங்கள். என் உடம்பும் உள்ளமும் சோர்ந்து போயிருக்கின்றன. இப்போது நான் புறப்பட எண்ணினாலும் ஓர் அடிகூட என்னால் எடுத்து வைக்க முடியாது. நாளைக்கு முடிவாகச் சொல்கிறேன்' என்றார். நானும் அவருக்கு ஒருநாள் அவகாசம் கொடுப்பது நல்லது என்று எண்ணி, 'ஆகட்டும், அம்மா! ஒரு நாளில் ஒன்றும் குடி முழுகிப் போகவில்லை. நாளைக்கே முடிவு செய்யலாம்' என்று சொன்னேன்.

''மறுநாள் ராத்திரி எப்படியாவது அவருடைய மனத்தைத் திருப்பி அவரையும் அழைத்துக் கொண்டு திரும்பலாம் என்று எண்ணியிருந்தேன். ஆனால் மறுநாள் மாலை நான் சற்றும் எதிர்பாராத சம்பவம் நடந்துவிட்டது. சளுக்கச் சக்கரவர்த்தி புலிகேசி பொன்முகலியாற்றைக் கடந்து வந்து எங்களுடன் சேர்ந்து கொண்டார். அவருடன் ஒரு சிறு சைனியமும் வந்தது! தளபதி சசாங்கனை அங்கேயே காவலுக்கு நிறுத்திவிட்டு இவர் மட்டும் முன்னால் செல்லத் தீர்மானித்து வந்திருக்கிறார் என்று ஊகித்தேன். அதன்படியே அன்று இரவுக்கிரவே எல்லாரும் வடக்கு நோக்கிப் பிரயாணமானோம். எனக்கு ஏற்பட்ட ஏமாற்றத்தையும் துக்கத்தையும் சொல்லி முடியாது. வழியில் சிவகாமி அம்மையோடு தனியாயிருக்க நேர்ந்தபோது, 'அம்மா! இப்படிச் செய்துவிட்டீர்களே!' என்றேன். 'நானா செய்தேன்? விதி இப்படி இருக்கும் போது நான் என்ன செய்வேன்?' என்றாள் சிவகாமி. இரண்டு நாள் பிரயாணத்துக்குப் பிறகு மூன்றாவது நாள் திருவேங்கட மலையின் அடிவாரத்தில் சென்று தங்கினோம். முதல் இரண்டு நாள் பிரயாணத்தில் புலிகேசி நாங்கள் தங்கியிருந்த பக்கம் வரவேயில்லை. மூன்றும் நாள் மாலை நாங்கள் ஒரு பாறையின் பக்கத்தில் தங்கியிருந்தோம். சமீபத்தில் குதிரைகளின் காலடிச் சத்தம் கேட்டது. சிறிது நேரத்துக்கெல்லாம் புலிகேசியும் இன்னும் சில குதிரை வீரர்களும் அந்தப் பாறையின் திருப்பத்தில் வந்து நின்றார்கள். சக்கரவர்த்தி குதிரைமேல் இருந்து இறங்கி எங்கள் அருகில் வருவாரோ என்று நான் எதிர்பார்த்தேன். அவ்விதம் நடைபெறவில்லை. சற்று நின்று பார்த்துவிட்டுச் சக்கரவர்த்தி குதிரையைத் திருப்ப யத்தனித்த போதுதான் சற்றும் எதிர்பாராத அதிசயச் சம்பவம் நடைபெற்றது. கண்ணை மூடித் திறக்கும் நேரத்தில் சிவகாமி பெண்கள் கூட்டத்தின் மத்தியிலிருந்து ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்து ஓடினார். புலிகேசியின் குதிரைக்கு எதிரில் வழிமறித்து நின்று, 'சக்கரவர்த்தி! ஒரு விண்ணப்பம்!' என்று அலறினார்.

''சிவகாமியம்மையின் அலறலைக் கேட்டு அந்தக் கல்நெஞ்சன் புலிகேசி மனம்கூட இளகியிருக்க வேண்டும். உடனே, புலிகேசி குதிரையிலிருந்து கீழே குதித்துச் சிவகாமியின் அருகில் வந்தார். 'பெண்ணே! என்ன விண்ணப்பம் செய்து கொள்ளவேண்டும்?' என்று கேட்டார். ஆகா! அப்போது சிவகாமி அம்மையின் வாக்கிலிருந்து வந்த ஆவேச மொழிகளை எவ்விதம் வர்ணிப்பேன்! அத்தனை தைரியமும் சாமர்த்திய

Prestige

PREETT

# பத்து லட்சத்துக்கும் அதிகமான குடும்பத் தலைவிகள் உபயோகிப்பது பிரஸ்டீஜ்—இந்தியாவில் அதிகம் விற்பனையாகும் பிரஷர் குக்கர்

## காரணம் என்ன?



**அதிகக் கொள்ளளவு:**
பிரஸ்டீஜ் மூடி வெளிப்புறம் பொருந்துவதால் அதிக உணவு சமைக்க நிறைய இடம் கிடைக்கிறது. உள் அடுக்குகள் பெரியவை. காரணம் பிரஸ்டீஜின் கொள்ளளவு வேறு வகை குக்கர்களை விட 1/3 பங்கு அதிகம்.

**அதி வேகம்:**
பிரஸ்டீஜில் உபயோகிக்கப்படும் சிறப்பான அலுமினியக் கலப்பு உலோகம், சீராகவும் விரைவாகவும் சூடு பரவ உதவுகிறது. அதனால் நேரமும் எரிபொருளும் மிச்சம்.

**அதிக பாதுகாப்பானது:**
மூடுவதற்கு இரட்டிப்பு வசதியுள்ள மூடி. மூன்று கட்டங்களில் அமைந்துள்ள பின்டிலுடன் கூடிய ர்ப்பர் பாதுகாப்பு அடைப்பான், குக்கரை பாதுகாப்பானதாகச் செய்கிறது.

பிரஸ்டீஜ் 6 அளவுகளில் கிடைக்கிறது. வாழ்நாள் முழுவதும் உழைப்பதற்கு உறுதியளிக்கிறது.

உங்கள் பிரஸ்டீஜ் குக்கர் அதி நுட்பமானது. சிறந்த பயிற்சி பெற்ற பழுதுபார்ப்போர் தான் அதை சீராக்க முடியும். விற்பனைக்குப் பிறகும் உங்கள் பிரஸ்டீஜுக்கு விரைவாகவும் தரமாகவும் சீர்பணி புரிய, நாடெங்கும் 250க்கும் அதிகமான ஸர்வீஸ் ஸ்டேஷன்கள் இருக்கின்றன. பிரஸ்டீஜ்-ப்ரீத் பணி நிலையங்களிலும், விற்பனையாளர்களிடமும் மட்டுமே உத்திரவாதமுள்ள மாற்றுப் பகுதிகள் கிடைக்கின்றன.




டிடி. (பிரைவேட்) லிமிடெட், பெங்களூர் 560016

SAA/TTP/1008 R

## இல்லத்தரசிகளே!

சரியான அளவுகளைத் தெரிந்துகொள்ள உபயோகியுங்கள்

**PREETT ப்ரீத் ஸ்டாண்டர்ட் அளவிடும் கப் மற்றும் ஸ்பூன்கள்**

ஹோம் சயின்ஸ் அசோசியேஷன் ஆஃப் இந்தியாவின் அங்கீகாரம் பெற்றவை. திரவ-திட பதார்த்தங்களை இனி கண் மதிப்பில் அளவிட வேண்டியதில்லை.
எல்லா பிரபல விற்பனை நிலையங்களிலும் கிடைக்கும்.



மும் வாக்குவன்மையும் அவருக்கு எங்கிருந்துதான் வந்ததோ, அறியேன். கம்பீரமாகப் புலிகேசியை நிமிர்ந்து பார்த்து, தழுதழுத்த குரலில், சிவகாமி அம்மை கூறிய மொழிகளை ஏதோ எனக்கு ஞாபகம் உள்ள வரையில் கூறுகிறேன்.

'''ஐயா! பூமண்டலத்தை ஆளும் மன்னர்களாகிய நீங்கள் உங்களுடைய வீரத்தையும் புகழையும் நிலைநாட்டிக் கொள்ள யுத்தம் செய்கிறீர்கள். இன்றைக்கு எதிரிகளாயிருக்கிறீர்கள் - நாளைக்குச் சிநேகிதர்களாகிறீர்கள் - இன்றைக்கு ஒருவருடைய அரண்மனையில் இன்னொருவர் விருந்தாளியாயிருக்கிறீர்கள்; மறு நாள் போர்க்களத்தில் யுத்தம் செய்கிறீர்கள். உங்களுடைய சண்டையிலே ஏழைப் பெண்களாகிய எங்களை ஏன் வாட்ட வேண்டும்? உங்களுக்கு நாங்கள் என்ன கெடுதல் செய்தோம்? கருணைகூர்ந்து எங்களையெல்லாம் திருப்பி அனுப்பிவிடுங்கள். இங்கே சிறைப் பிடித்து வைத்திருக்கும் பெண்களில் சிலர் கைக் குழந்தைகளைக் கதற விட்டு விட்டு வந்திருக்கிறார்கள். இன்னும் அநேகர் கையிலே கட்டிய திருமணக் கங்கணத்துடன் வந்திருக்கிறார்கள். இவர்களையெல்லாம் நீங்கள் விடுதலை செய்து அனுப்பாவிட்டால் தங்களுடைய தலைநகரமாகிய வாதாபியை அடைவதற்குள் அவர்களுக்குப் பைத்தியம் பிடித்துவிடும். திக்விஜயம் செய்துவிட்டுத் தலைநகருக்குத் திரும்பும் போது சித்தப் பிரமை பிடித்த ஆயிரம் ஸ்திரீகளை அழைத்துக் கொண்டு போவீர்களா? அதில் உங்களுக்கு என்ன லாபம்? ஆயிரம் பெண்கள் மனமார வாயாரத் தங்களை வாழ்த்திக் கொண்டு வீடு திரும்பும்படி செய்யுங்கள்!'' இப்படிக் கல்லும் கரையுமாறு சிவகாமி அம்மை கேட்டதற்கு, 'பெண்ணே! உன்னுடைய பாவ அபிநயக் கலை சாமர்த்தியங்களையெல்லாம் நாட்டியக் கச்சேரியில் காட்ட வேண்டும். இங்கே போர்க்களத்தில் காட்டி என்ன பிரயோசனம்!' என்றான் அந்த ரஸிகத் தன்மையற்ற நிர்மூடன்!....''

சத்ருக்னன் இவ்வாறு சொன்னபோது மாமல்லர் ஒரு நெடுமூச்சு விட்டு, ''ஆகா! ஆயனரின் மகள் அந்த நீசனிடம் போய்க் காலில் விழுந்து வரம் கேட்டாள் அல்லவா? அவளுக்கு வேண்டியதுதான்!'' என்று கொதிப்புடன் கூறினார்.

**ச**த்ருக்னன் மேலே சொன்னான்: ''ஆம், பிரபு! சிவகாமி அம்மையும் தங்களைப் போலவே எண்ணியதாகத் தோன்றியது. புலிகேசியின் மறுமொழியைக் கேட்டு அவர் தலையைக் குனிந்து கொண்டார். சிறிது நேரம் தரையைப் பார்த்தவண்ணம் இருந்தார். அப்போது அந்தச் சண்டாளப் பாவி, 'பெண்ணே! உன் அபிநய சாகஸத்தைக் கண்டு நான் ஏமாந்துவிடமாட்டேன். ஆனால் உன் பேச்சில் கொஞ்சம் நியாயம் இருக்கிறது. ஆகையால் உன் வேண்டுகோளை நிறைவேற்ற இணங்குகிறேன். ஆனால் அதற்கு ஒரு நிபந்தனை: நீ இந்தப் பெண்களுக்காக மிகவும் இரங்கிப் பேசினாய். உன்னுடைய இரக்கம் வெறும் பாசாங்கு இல்லை என்பதை நீ நிரூபிக்க வேண்டும். இவர்கள் கட்டிய கணவனைப் பிரிந்து வந்தவர்கள் என்றும் கைக்குழந்தைகளைப் பிரிந்து



வந்தவர்கள் என்றும் சொன்னாயல்லவா? ஆனால் உனக்குக் கணவனும் இல்லை, குழந்தையும் இல்லை. நீ என்னுடன் வாதாபிக்குச் சந்தோஷமாய் வருவதற்குச் சம்மதிக்கிறாயா, சொல்லு! சம்மதித்தால் உன்னைத் தவிர இவர்கள் எல்லாரையும் இந்தக் கணமே விடுதலை செய்து அனுப்பி விடுகிறேன்' என்றான். அந்த மொழிகளைக் கேட்டதும், அந்தப் பாவியை அங்கேயே கொன்றுவிடலாமா என்று எண்ணினேன்.''

மாமல்லர் குறுக்கிட்டு, ''நிபந்தனைக்குச் சிவகாமி சம்மதித்தாளா?'' என்று குரோதம் ததும்பிய குரலில் கேட்டார்.

''ஆம், பிரபு! சிவகாமி அம்மை ஒரு கணம்கூடத் தாமதிக்கவில்லை. உடனே எழுந்து நின்று, 'சம்மதம், சக்கரவர்த்தி! நிபந்தனையை ஒப்புக் கொள்கிறேன்' என்றார். அச்சமயம் சிவகாமி அம்மை

நின்ற நிலையும், அவருடைய முகத் தோற்றமும் தெய்வீகமா யிருந்தன! இராவணனுக்கு முன்னால் நின்ற சீதையையும், துரியோதனன் சபையில் நின்ற பாஞ்சாலியையும், யமன் முன்னால் வாதாடிய சாவித்திரியையும், பாண்டியன் முன்னால் நின்ற கண்ணகியையும் ஒத்து அச்சமயம் ஆயனரின் திருக்குமாரி விளங்கினார்..''

''சத்ருக்னா! உன்னுடைய பரவச வர்ணனை அப்புறம் இருக்கட்டும். பின்னர் என்ன நடந்தது?'' என்று மாமல்லர் கேட்டார்.

''சற்று நேரத்துக்கெல்லாம் சக்கரவர்த்தி எங்களை விடுதலை செய்யும்படி கட்டளையிட்டார். பொன்முகலி ஆறு வரையில் எங்களைத் திரும்பக் கொண்டு போய் விட்டு விடும்படியும், சில வீரர்களுக்கு ஆக்ஞாபித்தார். அவ்வளவு நாளும் அழுத கண்ணும் சிந்திய மூக்குமாக இருந்த ஸ்திரீகள் எல்லோரும் இப்போது ஒரே சந்தோஷத்தில் ஆழ்ந்தார்கள். சிவகாமியைத் தலைக்குத் தலை வாழ்த்தினார்கள். ஆனால் எனக்கு இடி விழுந்ததுபோல் இருந்தது. சிவகாமியின் காலில் விழுந்து, 'அம்மா! உங்களை விட்டு நான் போக மாட்டேன். சக்கரவர்த்தியிடம் மறுபடியும் வரம் கேட்டு என்னை உங்களுடனேயே வைத்துக் கொள்ளுங்கள்' என்றேன். சிவகாமி ஒரே பிடிவாதமாக, 'நீதான் முக்கியமாகப் போக வேண்டும். என் தந்தையிடம் போய்ச் செய்தி சொல்ல வேண்டும்' என்றார். நான் எவ்வளவோ சொல்லியும் கேட்கவில்லை. கடைசியில் வேறு வழியில்லை யென்று நானும் புறப்படத் தீர்மானித்தேன். மேலும் அங்கே தாமதித்தால் என்னுடைய வேஷம் வெளிப்பட்டுச் சிவகாமிக்கும் உபயோகமில்லாமல் இங்கே வந்து செய்தி சொல்லவும் முடியாமல் போய்விடலாம் என்று பயந்தேன். ஆகவே, 'தங்கள் விருப்பம் அதுவானால் போகிறேன், அம்மா! அப்பாவுக்கு என்ன செய்தி சொல்லட்டும்?' என்று கேட்டேன். 'என்னைப் பற்றிக் கவலைப் படவேண்டாம் என்றும், வாதாபியில் நான் சௌக்கியமாய் இருப்பேன் என்றும் சொல்லு. வாதாபியிலிருந்து திரும்பி வரும்போது அஜந்தா வர்ண இரகசியத்தைத் தெரிந்து கொண்டு வருவேன் என்றும் சொல்லு' என்றார் சிவகாமி அம்மை...''



இவ்விதம் சத்ருக்னன் சொன்னதும் ஆயனர் துள்ளும் உற்சாகத்துடனே, ''பார்த்தீர்களா, பல்லவகுமாரா! சிவகாமி சௌக்கியமாக இருக்கிறாள். அதோடு அஜந்தா இரகசியத்தையும் அறிந்து கொண்டு வருவதாகச் சொல்லுகிறாள். அதற்காக நான் பரஞ்சோதியை அனுப்பியதெல்லாம் வீணாகப் போய் விட்டதல்லவா? என் அருமைக் குமாரியினால் என் மனோரதம் நிறைவேறப் போகிறது. இதுமட்டுமல்ல, வாதாபிச் சக்கரவர்த்தியைப் பற்றி நமது எண்ணத்தைக் கூட மாற்றிக் கொள்ள வேண்டி யிருக்கிறது. அவர் ரஸிகத் தன்மை அற்றவர், கலை உணர்ச்சியே இல்லாதவர் என்று எண்ணிக் கொண்டிருந்தோமே? அப்படியிருந்தால், ஆயிரம் பெண்களைத் திருப்பி அனுப்பிவிட்டுச் சிவகாமியை மட்டும் அழைத்துப் போயிருப்பாரா? பிரபு!... எனக்கு மட்டும் உடம்பு குணமாக வேண்டும். குணமானதும் நானே வாதாபிக்குப் போவேன்... என்றார்.''

ஆயனரின் வார்த்தைகள் மாமல்லரின் செவிகளில் நாராசம் போல விழுந்து கொண்டிருந்தன. சிவகாமி வாதாபிக்குப் போகச் சம்மதித்தாள் என்றதுமே மாமல்லரை ஆயிரம் தேள்கள் ஏககாலத்தில் கொட்டுவது போலிருந்தது. சிவகாமியிடம் அவர் உள்ளத்தில் கொண்டிருந்த பரிசுத்தமான அன்பில் ஒரு துளி நஞ்சு அப்போது கலந்தது என்றே சொல்ல வேண்டும். சிவகாமி மனமுவந்து புலிகேசியிடம் வாதாபிக்குச் செல்லச் சம்மதித்தாள் என்னும் எண்ணத்தை அவரால் சகிக்க முடியவில்லை. இந்த எண்ணத்தினால் புண்பட்டிருந்த அவருடைய இருதயத்தில் கூரிய வேலை நுழைப்பது போலிருந்தது ஆயனரின் பேச்சு.

# கிணறு காப்பாற்றியது!



"அந்நாளைய சங்கீத மாணுக்கர்களுக்குப் பெரும் சோதனைதான். சங்கீதம் பயிலுவிக்கும் குருமார்கள் சிஷ்யர்களை வீட்டு வேலைகளையும் செய்யச் சொல்வார்கள். வேட்டி துவைத்துப் போடச் சொல்வார்கள்; கடைத் தெருவுக்குப் போய்க் காய் கறி, மளிகை வாங்கி வரச் சொல்வார்கள்; மிகுந்த நேரத்துக்குக் கிணற்றிலிருந்து தண்ணீர் இழுக்கச் சொல்வார்கள்!"- இங்கு நிறுத்தி இலேசாகச் சிரித்துக் கொண்டார் சீர்காழி திரு கா. சதாசிவம்பிள்ளை.

"நீங்களும் இப்படியெல்லாம் சிரமப்பட்டவர்தான் போல் இருக்கிறது. அதை நினைத்துத்தானே சிரிக்கிறீர்கள்?"

"நான் குருகுலவாசம் செய்தபோது தண்ணீர் இழுக்கும் வேலை எனக்குத் தரப்பட்டது. இளம் வயசு. எனக்கு அது பிடித்தமில்லை. அதை எப்படிச் சொல்வது? எனவே, ஒரு நாள் தண்ணீர் இழுக்கும்போது கிணற்றில் விழுந்துவிட்டேன். இரண்டொரு வாய் தண்ணீர்கூடக் குடித்து விட்டேன்!"

"இப்படி அசட்டுக் காரியம் யாராவது செய்வார்களா ?"

"அப்படிச் செய்யவில்லை என்றால், எனக்கு அந்த வேலையிலிருந்து எப்படி விடுதலை கிடைத்திருக்கும் ! நீ தண்ணீர் இழுத்தது போதுமடா ! இப்படிக் கிணற்றில் விழுந்து உயிரை விட்டு வைத்தால், உங்கள் வீட்டாருக்கு யார் பதில் சொல்வது?" என்று கூறி எனக்கு அந்த வேலையிலிருந்து விடுதலை தந்து விட்டார்கள். எனக்கு நன்றாக நீந்தத் தெரியும் என்ற ரகசியம் அவர்களுக்குத் தெரியாது !"



"வீட்டு வேலைகளைச் செய்வதே குரு தட்சிணையாகிவிடுமாக்கும்?"

"அப்படி ஒன்றுமில்லை. குருதட்சிணை கொடுக்காமல் யாரும் பயில்வதில்லை. சாப்பாட்டுக்கு ஏழு ரூபாயும் வர்ணம் வரை கற்க முந்நூற்றைம்பது ரூபாயும் தருவோம்.... அப்புறம் கீர்த்தனை ஆரம்பித்த பிறகு சின்னக் கீர்த்தனைக்கு மூன்று ரூபாய், நடுத்தரக் கீர்த்தனைக்கு ஐந்துரூபாய், பெரிய கீர்த்தனைக்கு ஏழு ரூபாய் என்று ஒரு கணக்கு."



சதாசிவம்பிள்ளை

"கீர்த்தனையில் சின்னது, பெரிசுகூட உண்டா ?"

"ஆமாம். 'ப்ரோவ பாரம்மா' ஒரு களை; சின்னது. 'தினமணி வம்ச' இரண்டு களை; நடுத்தரம். 'நாகிவதாரதாரிணி தலை கொண்டி' பெரிசு !"

இப்படிச் சங்கீத யோகம் புரிந்து சங்கீத ஞானத்தில் தேறி நின்ற அன்றையப் பெரிய சங்கீத வித்துவான்கள் பலரைப் பற்றி ஸ்ரீ சதாசிவம் பிள்ளை ஏராளமான செய்திகளைக் கூறுகிறார். அவற்றுள் ராஜரத்தினம் பிள்ளையின் வாசிப்பு பற்றி உணர்த்த அவர் கூறிய கதை :

"பைஜு என்பவன் ஓர் இசைப் பித்தன். அதனாலேயே அவனை 'பாவ்ரா' என்று கூறுவார்கள். அதாவது பைத்தியக்காரன் என்று பொருள். அவன் பாட்டுக்கு மான்களே மதி கிறங்கி நிற்குமாம். தான்ஸேனுக்கு அவன் பாட்டு என்ன பாட்டு என்ற கர்வம். கானகத்தில் அமர்ந்து பைஜு பாடி மான்களை வரவழைத்துவிட்டான். பாட்டை நிறுத்தி மான்களின் கழுத்தில் மாலையைப் போட்டான். அப்புறம்தான் அவை சுய நினைவு வந்து காட்டுக்குள் ஓடிவிட்டன. அவற்றைத் திரும்ப வரவழைக்குமாறு தான்ஸேனிடம் சொன்னான். தான்ஸேனுக்குப் பாடிப் பாடி வாய் வலித்ததே ஒழிய மான்கள் வருவதாகக் காணும். அந்த மான்களைப் போலத்தான் திருவாவடுதுறை ராஜரத்தினம் பிள்ளையின் நாதஸ்வரத்தைக் கேட்டு மக்கள் மெய்மறந்து நின்றிருக்கிறார்கள்."

— அக்ஷயம்

மாமல்லர் அப்போது தனிமையை விரும்பினார். பழைய தாமரைக் குளத்துக்குப் போக வேண்டும் என்று அவருக்கு விருப்பம் உண்டாயிற்று. சட்டென்று ஒரு துள்ளலில் எழுந்து நின்று, "சத்ருக்னா! அவ்வளவுதானே விஷயம்? சிவகாமி வேறு எந்தச் செய்தியும் அனுப்பவில்லை யல்லவா?" என்றார்.

சத்ருக்னன் தயக்கத்துடன் ஆயனரைப் பார்த்தான். அவர் ஏதோ யோசனையில் ஆழ்ந்திருப்பதைக் கவனித்த பின்னர், சிறிது தாழ்ந்த குரலில், "பல்லவ குமாரா! சிவகாமி அம்மை தங்களுக்கும் ஒரு செய்தி சொல்லி அனுப்பினார். வேலின் மீது ஆணையிட்டுக் கூறிய வாக்குறுதியைத் தங்களுக்கு ஞாபகப்படுத்தச் சொன்னார். சீதாதேவி இலங்கையில் காத்திருந்தது போல் தாங்கள் வாதாபிக்கு வந்து அழைத்துப் போகும் வரையில் காத்திருப்பேன் என்று சொன்னார்" என்றான்.

சற்று முன் மாமல்லருக்கு இவ்வுலகம் ஒரு சூனியமான வறண்ட பாலைவனமாகக் காணப்பட்டது. இப்போது அந்தப் பாலைவனத்தில் பசுமையான ஜீவபூமி ஒன்றும் இருப்பதாகத் தோன்றியது.

(தொடரும்)

# அரபிக்கடலின்




ஸோமாஸ்.

"ஸார், ஸார்! நானே மயில் வாகனத்தில் இருக்கும் முருகப் பெருமான் மாதிரி சர்வ ஜாக்கிரதையாக உட்கார்ந்திருக்கிறேன். நீர் வேறு சிரமப்படுத்துகிறீரே!" என்றார் ரயிலில் ஒரு சக பிரயாணி என்னைப் பார்த்து.

"உம்ம பாடு தேவலே, ஸ்வாமி. நான் அந்த மயில் வாகனமாகவே இருக்கிறேன்!" என்றேன்.

எங்கள் சம்பாஷணையைக் கேட்டு அந்தக் கம்பார்ட்மெண்டே சிரித்தது. அந்தச் சிரிப்பில் பிரயாணிகள் ஆடிய ஆட்டத்தில் ஓரளவு நான் சரியாக உட்கார முடிந்தது. "நீங்கள் எர்ணாகுளம் போகிறீர்களா?" என்று கேட்டார் ஒரு பெரியவர். "ஆமாம்" என்றேன்.

அவர் கேரள நாட்டைச் சேர்ந்தவர் என்றாலும் நன்றாய்த் தமிழ் பேசினார். கேரளத்துப் பலாப் பழம் பற்றிப் பேசினோம். "பலாப் பழம் ஜீரணிப்பது சிரமம் இல்லையா?" என்று ஒரு கேள்வி கேட்டு வைத்தேன்.

"எங்கள் நாட்டில் இதற்கு ஒரு பழமொழியே இருக்கிறது — 'சக்கக்குச் சுக்கு; மாங்யாக்குத் தேங்யா'. அதாவது பலாப் பழத்துக்கு மாற்று சுக்கு, மாம்பழத்துக்கு மாற்று தேங்காய் — அதைச் சேர்த்துக் கொண்டால் சரியாகிவிடும்" என்றார். அதற்குப் பிறகு இன்னும் சில மலையாளப் பழமொழிகள் சொன்னார். அவற்றுள் சிலவற்றை இங்கே தந்திருக்கிறேன்: 'காக்க குளிச்சால் கொக்காக இல்லா' (காக்கை குளித்தால் கொக்காகி விடாது) 'அடய்க்க கக்கவன் யானையும் கக்கும்' (பாக்குத் திருடியவன் யானையும் திருடுவான்). 'ஒருமயுண்டெங்கில் உலக்கமேல் கிடக்காம்' (ஒற்றுமையாயிருந்தால் உலக்கை மேலும் படுக்கலாம்). 'எருமையின்றே சுவட்டிலிருந்து வீணை வாயிச்சது போலே' (எருமை மாட்டின் முன்பு வீணை வாசித்தது போல).

அவர் பெயர் மாதவ பணிக்கர். ஓய்வு பெற்ற பள்ளி உபாத்தியாயர். எர்ணாகுளத்தைச் சேர்ந்தவர். "என்னைப் பற்றியெல்லாம் பத்திரிகையில் எழுதுவீர்களா?" என்று கேட்டார். இதோ எழுதிவிட்டேன்!

எர்ணாகுளத்துக்கு நான் போய்ச் சேர்ந்த போது நல்ல மழை; வெளுத்து வாங்கிக் கொண்டிருந்தது. பிளாட்பாரத்தில் ஓர் ஒதுக்குப்புறமாக நின்றுகொண்டு மழைச் சாரலில் நனைந்த வண்ணம் கொச்சி "கல்கி" ஏஜெண்டுக்காகக் காத்திருந்தேன்.





சற்று நேரத்துக்கெல்லாம் ஒருவர் கையில் குடையுடன் வேகமாக என்னை நோக்கி வந்தார். "நீராக்கும் கல்கி ஆபிசிலிருந்து வந்திருப்பது?" என்று அதிகாரக் குரலில் கேட்டார். நான் "ஆமாம்" என்றேன். "வாரும் போகலாம்!" என்றார். கொட்டும் மழையை லட்சியம் செய்யாமல் அவர் வேகமாக நடந்தார். நான் அவருக்குச் சரியாக ஓடி ஸ்டேஷனுக்கு வெளியே வந்தேன். அவர் கையில் குடை இருந்தது. அந்தக் குடைக்குள் புகுந்து கொள்ளும் முயற்சியில் நான் தோற்றுத்தான் போனேன். அவர் நடை நல்ல வேகம். அதைவிட மழை இன்னும் வேகம். எர்ணாகுளம் ஸ்டேஷனிலிருந்து வெளியே வந்து கொச்சிக்குப் போக பஸ் ஸ்டாப்பை அடைவதற்குள் நான் நன்றாய் நனைந்து விட்டேன். கொச்சி "கல்கி" ஏஜெண்ட் முந்திக் கொண்டே "என் ஓய் பிந்திக் கொண்டே போய் மழையில் நனைகிறீர்? குடையில் வாருமே!" என்று அழைத்தார்.

எனக்கு என்ன பதில் சொல்வதென்று தெரியவில்லை. 'நீர்தான் முந்திக் கொண்டீர்' என்று எப்படிச் சொல்வது? அத்துடன் வீசி அடித்த மழையும், சுழன்று அடித்த காற்றும் என்னை நடுக்கி எடுத்த குளிரும்... எனக்குப் பேச நா எழவில்லை. நல்ல வேளை! பஸ் அவர் வீட்டுக்கு மிகவும் சமீபத்தில் நின்றது. 'மடப்பள்ளி மடம்' என்பது அவர் இருந்த அக்கிரகாரத்தின் பெயர். காம்பவுண்டுக்குள் பத்து வீடுகள். நடு முற்றத்துக்கு வழவழவென்று சிமெண்ட் பூசிச் சுத்தமாயிருந்தது. அத்துடன் மழை

வேறு அந்த இடத்தைச் சுத்தம் செய்திருந்தது. இந்த நாளில் இப்படி ஓர் அக்ரஹாரமா என்று வியந்து போனேன். மட்டாஞ்சேரி என்ற இடத்தில், கொச்சிராஜா அரண்மனைக்கு எதிரில் இந்த அக்ரஹாரம் இருக்கிறது. நடுவில் ஒரு பஜனை மடம். ஐம்பது ஆண்டுகளுக்கும் மேலாக இதில் ஸ்ரீ ராம பட்டாபிஷேகப் படம் வைத்துப் பூஜிக்கப்பட்டு வருகிறது. பிரபல சங்கீத வித்வான்களின் இசை நிகழ்ச்சிகளும், கதாகாலட்சேபங்களும் ஸ்ரீராம நவமி மகோத்சவ காலத்தில் அதிவிமரிசையாக நடைபெற்று வருகின்றன. அந்தணர் நல உரிமைச் சங்கம் நல்லபடியாகப் பொதுநல நோக்கோடு பல்லாண்டுகளாக இயங்கி வருகிறது.

# நகர்வலம்







1 ''ஓய், குளித்து விட்டுக் கோவிலுக்குப் போகலாம் வருகிறீரா?'' என்று கேட்டார் ''கல்கி'' ஏஜெண்ட், ஈ. வி. ஹரிஹரன்.

''ஸ்நானம்தான் வழியிலேயே சுத்தமான மழை ஜலத்தில் ஆகிவிட்டதே!'' என்று கூறி விட்டு உடைகளை மாற்றிக் கொண்டு புறப்பட்டேன். நல்ல வேளை! அப்பொழுது மழை நின்று விட்டது.

ஆனை வாதில் (யானை வாசல்) வழியாக டச்சு அரண்மனை (Dutch palace)க்குள் நுழைந்தோம். கொச்சி அரண்மனையைச் சேர்ந்த யானை அந்த வழியாகப் போகுமாம். இப்பொழுது மக்கள் போகும் வழியாகி விட்டது. இதை மட்டாஞ்சேரி அரண்மனை என்றும் கூறுகிறார்கள். இது மிகவும் பழைய காலக் கட்டடம். திருவனந்தபுரம் மாதிரியே இங்கும் மகாராஜா தெய்வ வழிபாடு செய்திருக்கிறார். இங்குள்ள ஆலயத்தில் பகவதி அம்மனுக்கும், ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவுக்கும், ஐயனுருக்கும் சந்நிதிகள் இருக்கின்றன. குருக்கள் மிகவும் பக்தி சிரத்தையோடு அர்ச்சனை செய்து பிரசாதம் வழங்கினார்.

அந்தக் கோயிலின் கோபுரம் தமிழ்நாட்டுக் கோவில்களில் உள்ளதுபோல் இல்லை. தாமிரத் தகடு வேய்ந்து உயரமான அமைப்பாயிருக்கிறது. அதையொட்டியே இருக்கும் கொச்சி மகாராஜா அரண்மனைக்குள் நுழைந்தோம். அந்தப் பெரிய கட்டடத்தில் தேக்கு மரம் வளமாக உபயோகிக்கப் பட்டிருந்தது. மகாராஜாவின் வாள், வேல், கேடயம், ஈட்டி முதலிய ஆயுதங்கள் காட்சிப் பொருட்களாக வைக்கப்பட்டிருந்தன. ராஜ மரியாதைக்குரிய பல்லக்கு, ராணியின் மூடு பல்லக்கு, சரிகை வேலைப்பாடுகளுடன் கூடிய ராஜ உடைகள் யாவும் கொச்சி ராஜ்யத்தின் மகோன்னதமான மன்னராட்சிக் காலத்தை நினைவுபடுத்திய வண்ணம் சோக நினைவுச் சின்னங்களாகத் திகழ்ந்தன. டச்சு அரண்மனை கி. பி. 1555ம் ஆண்டில் போர்ச்சுகீசியர்களால் கட்டப்பட்டது. பிற்காலத்தில் டச்சுக்காரர்கள் இவ்வரண்மனையைப் புதுப்பித்தனர். தர்பார் ஹாலில் பதினேழாம் நூற்றாண்டின் வண்ணச் சித்திரங்கள் பழைமையின் பெருமையை எடுத்தியம்பிக் கொண்டிருக்கின்றன.

- கொச்சி துறைமுகத்தில் உருவாகும் கப்பல் கட்டும் தளத்தின் ஒரு பகுதி.
- வைஸ் அட்மிரல் என். கிருஷ்ணன்.
- கொச்சி 'ஃபாக்ட்' உரத் தொழிற்சாலையின் ஒரு தோற்றம்.
- கொச்சியில், சீனத் தயாரிப்பான மீன் பிடிக்கும் வலைகள்.

### சொல்லில் சாகசம்!

நிதியமைச்சரவையிலிருந்து கே. ஆர். கணேஷ் கள்ளக் கடத்தல் செய்யப்பட்டு விட்டார்!



எம். எல். ஏ.க்கள் இனிமேல் சட்டசபைக்கு வரும்போது நிராயுதபாணிகளாக வரவேண்டும்... அதாவது செருப்பு அணியாமல் வரவேண்டும்!

டெக்கான் ஹெரால்ட் - 'பாலி'

---

கொச்சி நகரம், கொச்சிக் கோட்டை (Cochin Fort) மட்டாஞ்சேரி, வில்லிங்டன் தீவு, எர்ணாகுளம் ஆகிய முக்கிய பகுதிகளைக் கொண்டது.

மட்டாஞ்சேரியில் யூதர்களின் ஆலயம்—கி. பி. 1568ல் கட்டியது – செப்புத் தகடுகளினால் ஆன ஓடுகளைக் கொண்டது. பழம் பெருமையைப் பறைசாற்றிக் கொண்டிருக்கிறது. சீனர்களால் வரையப்பெற்ற வண்ணச் சித்திரங்கள் கொண்ட தட்டோடுகள் வரலாற்றுத் தொன்மை படைத்தவை.

கொச்சிக் கோட்டையில் புனித பிரான்சிஸின் மாதா கோயில் இருக்கிறது. அது மிகப் பழமையானது. ஐரோப்பியர்களால் முதன் முதலில் இந்தியாவில் கட்டப்பட்ட மாதா கோவில் இதுதான் என்று கூறப்படுகிறது. இன்னொரு வரலாற்றுப் பெருமையும் இந்த பிரான்ஸிஸ் மாதா கோயிலுக்கு உண்டு. வாஸ்கோட காமாவின் சடலம் இங்குதான் புதைக்கப்பட்டது. இதையடுத்து ஸாண்டா க்ரூஸ் மாதா கோவில் இருக்கிறது. தற்கால முறையில் கட்டப்பட்ட நீண்ட கோபுரத்தை உடையது. அதில் அழகான வண்ண ஓவியங்கள் வரையப்பட்டிருக்கின்றன.

வில்லிங்டன் ஒரு செயற்கைத் தீவு; கொச்சித் துறைமுகக் கடலை ஆழப்படுத்திய போது உருவானது. துறைமுகமும், இருப்புப் பாதையின் முடிவும் (Rail Terminus) இங்கு இருக்கின்றன. இடையறாத படகுப் போக்குவரத்து இந்த உப்பங்கழி நீரில் நடக்கிறது. மக்கள் பஸ்ஸுக்குக் காத்திருப்பது போல் நீராவிப் படகுக்காகக் காத்திருந்து ஏறி நகரின் பல பகுதிகளுக்கும் செல்கின்றனர். கொச்சி நகரில் நீராவிப் படகுப் பிரயாணம் ஓர் இன்பமயமான அநுபவம்தான்! ஒரு ஹால் மாதிரியே படகைக் கட்டியிருக்கிறார்கள். சுமார் நாற்பது பேர்கள் ஏறலாம்.

''ஓய், இந்த மாதிரிப் படகில் சென்னையில் போயிருக்கிறீரா நீர்? கொச்சிக்கே உரிய தனிப் பெருமையாக்கும் இது!'' என்றார் ஹரிஹரன்.

வேறொரு தனிப் பெருமையும் கொச்சி ராஜ்யத்துக்கு உண்டு என்று அங்குள்ளவர்கள் சிலரை விசாரித்துத் தெரிந்து கொண்டேன். அது பண்டங்களின் விலை உயர்வுதான். வாழ்க்கைத்தரம் இந்தியாவிலேயே கொச்சியில் தான் உயர்வாயிருக்கிறதாம். வீட்டு வாடகை சென்னையை விட அதிகம் என்று தெரிய வந்தது.

கேரள ராஜ்யத்தின் இன்னொரு பகுதியான கொச்சி நகரத்தைப் பசுமை போர்த்திய காடுகள், உப்பங்கழி நீரினாலான அழகிய ஏரிகள், பனங்காடுகள் எல்லாம் அணி செய்கின்றன. கொச்சி நகரின் இயற்கைத் துறைமுகம் வரலாற்றுத் தொன்மை படைத்தது. 'அரபிக் கடலின் அரசி' என்று சிறப்பாக அழைக்கப்படும் பெருமையும் கொச்சி நகருக்கு உண்டு. கொச்சி நகரத்தின் முக்கியமான பகுதியாக விளங்குவது எர்ணாகுளம். கொச்சித் துறைமுகத்துக்கு எதிர்ப் புறத்தில் இருப்பது. இது ஒரு காலத்தில் கொச்சி ராஜ்யத்தின் தலைநகரமாக இருந்தது. எர்ணாகுளம் மிகவும் அழகான பட்டணம். பல கோவில்கள் இருக்கின்றன. மிகவும் சுறுசுறுப்பான வியாபார ஸ்தலம்.

எர்ணாகுளத்தின் வடமேற்குப் பகுதியில் பால்கட்டித் தீவு (Bolghatty Island) என்ற ரம்மியமான தீவு ஒன்று இருக்கிறது. முன்பு இங்கு டச்சுக்காரர்கள் கட்டிய அழகிய அரண்மனை இப்பொழுது பயணிகள் பங்களாவாக மாற்றப்பட்டிருக்கிறது.

இரவு நேரங்களில் மின் விளக்குகளின் ஒளியில் கொச்சி நகரமும், சிறு தீவுகளும் சொப்பன சௌந்தரிய லோகமாகக் காட்சி தருகின்றன. நீர்வளம் மிக்க கேரள ராஜ்யத்தைச் சேர்ந்த கொச்சி - மின்வெட்டில்லாததால் ஒளி மயமாய்த் திகழ்கிறது.

வெல்லிங்டன் தீவிலுள்ள இந்திய சர்க்கார் டூரிஸ்ட் காரியாலயத்துக்குப் போய்க் கொச்சி ராஜ்யத்தைப் பற்றிய தகவல் வெளியீடுகள் இருக்கிறதா என்று விசாரித்தேன். அங்கு எந்தத் தகவலும் கிடைக்கவில்லை. சென்னை டூரிஸ்ட் இன்பர்மேஷன் பீரோ அலுவலகத்துக்குப் போய்க் கேட்கச் சொல்லி விட்டார்கள். இம்மாதிரி கொச்சிக்கு வரும் அயல் நாட்டுப் பிரயாணிகளைச் சென்னைக்குப் போகச் சொன்னால் அவர்கள் என்ன நினைப்பார்கள்? அயல் நாட்டுப் பயணிகளிடமிருந்து அந்நியச் செலாவணி சம்பாதிக்கும் திட்டம் இந்த லட்சணத்தில்தான் நடக்கிறது!

கொச்சி நகரத்துக்குப் புதுப் பெருமை சேர்ப்பது கொச்சி கப்பல் கட்டும் தளம். (Cochin Shipyard) இந்தியாவிலேயே பம்பாய், கல்கத்தா, விசாகப்பட்டினம் ஆகிய மூன்று நகரங்களில் கப்பல் கட்டும் தளங்கள் இருக்கின்றன. நான்காவது தளமாக இப்பொழுது கொச்சியில் 45.42 கோடி ரூபாய் மூலதனத்துடன் ஒன்று தொடங்கப்பட்டிருக்கிறது. மிட்ஸுபிஷி ஹெவி இன்டஸ்ட்ரீஸ் லிமிடெட் என்ற மிகப் பெரிய ஜப்பானிய ஸ்தாபனத்தின் தொழில் நுட்ப உதவியும் ஒத்துழைப்பும் இந்தக் கப்பல் தள அமைப்

புக்குக் கிடைத்திருக்கிறது. இந்தத் தொழிற்சாலைக்காக நூற்றி எழுபத்தைந்து ஏக்கரா நிலம் வாங்கப்பட்டிருக்கிறது. இதில் அமைக்கப்பட்டிருக்கும் தொழிற்சாலைகளாவன: கப்பலின் அடித்தளம் அமைக்கும் தொழிற்சாலை (Hull Shop); குழாய்த் தொழிற்சாலை (Pipe Shop); உலோகத் தகடுகள் தயாரிக்கும் தொழிற்சாலை; தச்சு வேலைத் தொழிற்சாலை; உப பொருள்கள் தயாரிக்கும் தொழிற்சாலை; இயந்திரத் தொழிற்சாலை; வர்ணப் பூச்சுக்கான தொழிற்சாலை; என்ஜின்கள் செய்யும் தொழிற்சாலை; கப்பல் பழுது பார்க்கும் தொழிற்சாலை; கப்பலைப் பராமரிக்கும் தொழிற்சாலை; தொழில் பயிற்சிப் பள்ளிக்கூடம்.

இந்தப் பயிற்சிப் பள்ளிக்கூடத்தில், கப்பல் சம்பந்தப்பட்ட பல்வேறு துறைகளிலும் தக்க பயிற்சி அளிக்கப்படுகிறது. ஐந்தாண்டுக் காலத்துக்குள் இந்தத் தொழிற்சாலைகள் பூர்த்தியாகிவிட வேண்டும் என்று முடிவு செய்யப்பட்டிருக்கிறது.

தொழிற்சாலையின் நுட்ப அறிவுத் திறனும் வேலைத் திறனும் அதிகரித்ததும், அதாவது இன்னும் ஐந்து, ஆறு ஆண்டுகளுக்குள் ஆண்டு ஒன்றுக்கு மூன்று கப்பல்கள் கட்ட முடியும் என்று கூறப்படுகிறது. இதன் துரித வளர்ச்சியில் மிகவும் அக்கறை கொண்டிருப்பவர் வைஸ் அட்மிரல் என். கிருஷ்ணன். அவர் கொச்சி கப்பல் தளத்தின் தலைவர், நிர்வாக டைரக்டர். அண்மையில் நடந்த பாகிஸ்தான் போரில் தீவிரப் பங்கு கொண்டவர்; 'காஸி' என்ற பாகிஸ்தானின் நீர்மூழ்கிக் கப்பலை அரிய சாகஸம் புரிந்து மூழ்கடித்தவர்.

கப்பல் கட்டும் தளத்தைப் பற்றி விவரமாகக் கூறிய திரு கே. கஸ்தூரி, கிருஷ்ணனைப் பற்றிக் கூறியபோது பரவசம் அடைந்தார். திரு கஸ்தூரி, கொச்சி ஷிப் யார்ட் லிமிடெட்டின் ஜெனரல் மானேஜர். அவர் தம்மைப் பற்றி ஒரு வார்த்தைகூடப் பேசவில்லை. அதனால் என்ன? பாரம்பரியம் அவரைப் பற்றிப் பேசும். சிறந்த தேச பக்தரும், மூதறிஞர் ராஜாஜி அவர்களின் அன்புக்குரியவருமான திரு கே. சந்தானம் அவர்களின் குமாரர்தான் திரு கஸ்தூரி.

கொட்டும் மழையில் தொழிற்சாலைகளுக்குத் தாமே காரோட்டிக் கொண்டு என்னை அழைத்துச் சென்றார். காலை எட்டு மணிக்குத் தம் வீட்டு வாசலிலேயே நின்றுகொண்டு என்னை வரவேற்றுச் சிற்றுண்டி விருந்தளித்து அவரும் அவர் மனைவியும் செய்த உபசாரங்களைக் கண்டு நான் நெகிழ்ந்து போனேன்.

''சுதந்திரம் அடைந்த பின்பு நிகழ்ந்த தவறுகளையே ஓயாமல் சுட்டிக் காட்டிக் கொண்டிருப்பதில் பயனில்லை. / நாம் அடைந்துள்ள வளர்ச்சியையும் சிந்தித்துப் பார்க்க வேண்டும். மேலும் வளர்ச்சியடைய அயராது உழைக்க வேண்டும்...'' என்று திரு கே. கஸ்தூரி தீவிரமாக நம்புகிறார். எனவே இவர் மேற்பார்வையில் கொச்சி கப்பல் கட்டும் தளம் துரித முன்னேற்றம் காணும் என்று நாமும் தீவிரமாக நம்புகிறோம்.

கொச்சி கப்பல் கட்டும் தளத்தைப் பார்த்துவிட்டுப் பிரசித்தி பெற்ற FACT உரத் தொழிற்சாலையைக் காண அம்பலமேடு என்ற இடத்துக்குச் சென்றேன். திரு கஸ்தூரி அவர்கள் அங்கே செல்லக் கார் கொடுத்து உதவினார். அந்த உரத் தொழிற்சாலையின் நிர்வாகிகள் அன்போடு என்னை வரவேற்றுத் தொழிற்சாலையைச் சுற்றிப் பார்க்க ஏற்பாடு செய்தார்கள். இராட்சத இயந்திரங்கள் அயராது உழைத்து விவசாயத்துக்கு இன்றியமையாதவைகளான இரசாயன உரங்களை உற்பத்தி செய்வதில் ஈடுபட்டிருக்கின்றன. கொச்சியில் உத்தியோக மண்டலம் என்னும் பகுதியில் இந்த உரத் தொழிற்சாலையின் காரியாலயங்கள் இருக்கின்றன.

கொச்சி ராஜ்யத்தின் கடற்கரை கள்ளக் கடத்தல்களுக்குப் பெயர் போனது. சுங்க இலாகா மிகவும் விழிப்பாக இந்தக் கள்ளக் கடத்தல்காரர்கள் விஷயத்தில் செயற்பட்டு வருகிறது. சுங்க இலாகா கலெக்டர் திரு வெங்கட்ராமய்யரை இது விஷயமாய்ப் பேட்டி கண்டேன். நான் கேட்ட கேள்விகளுக்கு அவர் வெளிப்படையாகப் பதில் அளித்தால் அது கள்ளக் கடத்தல்காரர்களுக்குத் துப்புக் கொடுத்த மாதிரி ஆகிவிடும் என்று கூறிவிட்டார்!

கப்பல் தொழிலகத்தையும் உரத் தொழிற்சாலையையும் பார்த்த பிறகு என் நெஞ்சத்தில் புதியதோர் உரம் பிறந்து விட்டது. ''நடையும் பறப்பும் உணர் வண்டிகள் செய்வோம், ஞாலம் நடுங்க வரும் கப்பல்கள் செய்வோம்'' என்ற மகா கவியின் கனவு நனவாகிக்கொண்டிருக்கிறது என்ற இறுமாப்பில் மிதந்தபடி சென்னை திரும்பினேன்!

மார்கோ சோப்
சுத்தம் செய்வதோடு மட்டும்
நிற்பதில்லை — குளிர்காலத்திலும்
சருமத்தை பாதுகாக்கிறது.

## ஏனெனில் மார்கோவில் மட்டுமே வேப்பெண்ணெய் சேர்ந்துள்ளது




***மார்கோ சோப்***
***உங்கள் சருமத்தை மிருதுவாயும்,***
***மழமழப்பாயும் வைத்திருக்கிறது!***

ஒரு கல்கத்தா கெமிகலின் தயாரிப்பு

CCM-4.8.-A

**விநியோகஸ்தர்கள்: சிவராம் & ஸ்வாமி, சென்னை**



ராமநாதன்

பாலக்காடு மணி





ஜெயராமன்

வி. எஸ்.



மார்கழி மாதக் கலைவிழா மிகப் பொருத்த மாகக் கலாக்ஷேத்திரத்தின் ஆண்டாள் சரித் திரத்துடன் அடியேனுக்கு ஆரம்பமாகியது. 'எங்கும் கலப்படம் எதிலும் கலப்படம் என் றுள்ள சூழலில் கலப்படமே இல்லாத ஓர் இடம் கலாக்ஷேத்திரம்தான்' என்று அமைச் சர் நெடுஞ்செழியனால் பாராட்டப்பெற்ற கலாக்ஷேத்திரம் தமிழகத்தின் பெருஞ்செல் வம் என்றால் கிருஷ்ணவேணி கலாக்ஷேத்திரத் தின் அருஞ்செல்வம். சங்கீதத்தில் அவ்வப் போது கற்பனை செய்து நிரவலும் ஸ்வரங் களும் பாடலாம் என்பது போல் நடனத்தி லும் மேடையில் புதுப் புதுக் கற்பனைகளைத் தோற்றுவிக்கலாம் என்பதற்கு அத்தாட்சி அன்று கிடைத்தது. ஒட்டியாணம் ஒரு சம

# மலர்ந்த பூக்கள் பல; நுகர்ந்த மணங்கள் சில.

யம் நெகிழ்ந்த போது ஆண்டாள் அதைச் சரி செய்யுமாறு தோழியிடம் கூற, தொடர்ந்து நடந்த சில அபிநயங்கள் நிச்சயமாகத் தயாரிப்பில் இருந்திருக்க முடியாது. கிருஷ்ண வேணியின் இந்த அபூர்வ ஆற்றல் மற்றொரு காட்சியை நினைவூட்டியது. அகாடமியில் ஒரு முறை மிருதங்கத்தின் தொப்பி கிழிந்துவிட வேறு ஒரு வாத்தியம் வந்து சேரும் வரை சுமார் ஐந்து நிமிஷங்களுக்குப் பாலசரஸ்வதி அந்த அடியையே திரும்பத் திரும்பப் பாடிக் கொண்டு புதுப் புதுக் கற்பனைகளுடன் அபி நயித்ததுதான் அது!

கிருஷ்ணவேணி மட்டுமென்ன, கலாக்ஷேத் திரத்தின் வேறு எந்தக் கலைஞரிடம்தான் குறை கண்டுபிடிக்க முடியும்? அத்தனை பேர் சேர்ந்த மாதிரி மேடையில் தோன்றினாலும் யாரிடமாவது ஒரு பிசிறு தட்டுகிறதா?

சூடிக் கொடுத்த சுடர்க்கொடியைப் பார்த்த கையோடு அகாடமியில் நெதுனூரி அவளைச் சூடு கொடுத்த சுடர்க்கொடியாக்கி விட்டதைக் கேட்கவும் நேர்ந்தது. ஆனால் சிரித்தபடியே வெகு சீக்கிரம் அதைத் திருத் திக் கொண்டும் விட்டார். அவர் சிரித்தது சரி; ஆனால் அவையோர் சிரித்திருக்க வேண் டியதில்லை. தமிழ்நாட்டுக்கு வந்தபிறகு தமிழில் ஏதாவது பாடாமல் இருக்கக் கூடாது என்ற நல்ல எண்ணத்துடன் அந்தப் பல்லவியைக் கையாண்டிருக்கிறார் கிருஷ்ண மூர்த்தி. பகவானே சூடிக் கொடுத்த மாலை தான் வேண்டும் என்று கேட்கவில்லையா? மனப்பூர்வமாகத் தமிழன்னைக்குச் சமர்ப்பிக் கப்பட்ட நிவேதனத்தில் அறியாமல் தவறு நேர்ந்து விட்டதை நாம் பெரிதுபடுத்த வேண்டாம். பாரதி, கம்பன் விழாக்களில் ருஷ்யரும் அமெரிக்கரும் மழலையாகத் தமிழ் பேசுவதை ஆஹாகாரம் செய்து ரசிப்ப வர்கள்தாமே நாம்.

அன்று ஆரம்பத்தில் அசைந்து கொடுக்காம லிருந்த அகாடமி ரசிகர்கள் காம்போதி ஆலாபனை முடிந்ததும் கட்டுப்படுத்திக் கொள்ள முடியாமல் கொட்டித் தீர்த் தார்கள். பிறகு ஸிம்மேந்திர மத்திமத்தின் கம்பீரத்தில் சொக்கிப் போனார்கள்.

வயலின் தயாரிப்புக்கு மரம் 'ஸீஸன்' ஆக வேண்டும் என்பார்கள். பல தலைமுறை காலத் துக்குக்கூட மரத்தைப் பரணில் போட்டு வைத்திருந்து பக்குவப்பட்ட பிறகு எடுத்து வயலின் தயாரிப்பார்களாம். அன்று கிருஷ்ண மூர்த்திக்குப் பக்க வாத்தியமாக அமைந்த

கிருஷ்ணமூர்த்தி



கிருஷ்ணவேணி



லால்குடி ஜெயராமன்



சிவராமன்
(கடுக்கனுடன் !)



ஜெயராமனின் வாசிப்பும் அப்படித் தலைமுறை தலைமுறையாக 'ஸீஸன்' ஆகி வந்ததுதான். அது விகசிக்கக் கேட்பானேன்?





வேலேந்திய கரம் - குழலேந்திய தியாகராஜன் — ரமணி

நேதனூரி தமிழ் பாடல்கள் அதிகம் பாடாத குறையை இரவு டி. கே. ஜெயராமன் நிவர்த்தி செய்து விட்டார். அகாடமி அரங்கில் தமிழ்ப் பாடல்களுக்கு ஒரு ரிகார்ட் ஏற்படுத்தி யிருப்பார் என்றே தோன்றுகிறது. வேணு கோபால், சிவன் கீர்த்தனைகள் அதிகம் இடம் பெற்றன.

ஜெயராமன் பாடும்போது ரசிகர்கள் அனுபவிப்பது மட்டுமல்ல. அவரே கீர்த்தனையை அனுபவித்துப் பாடுகிறார். அதோடு அனுஸ்வரங்களுடன் கூட இடைவெளியின்றிச் சிரமப்பட்டுப் பாடும்போது அகாடமியின் ஏர்கண்டிஷன் இன்றியே நம் மனங்கள் குளிர்ந்து விடுகின்றன. ரஞ்சனி ராகங்களின் மாலிகை புதுமைப் பொலிவுடன் ரஞ்சகமாய் இருந்தாலும் நிறைவைத் தந்தவை, தோடி (தாமதமா) மத்தியமாவதி (கற்பகமே) கீர்த்தனைகள்.

அகாடமி அரங்கின் ஏர்கண்டிஷனை நிறுத்தி விட்டால் வேறும்; முடுக்கிவிட்டால் சில சமயம் வயலினுக்குக்கூடக் குளிர் எடுத்து விடும்! திரு எம். டி. ராமநாதன் சிரமப்பட்டதில் வியப்பில்லை. கம்பளியை எடுத்துக் கழுத்தைச் சுற்றிப் போர்த்திக்கொண்டு பாட்முயன்று அது வசதிப்படாமல் மிஷினை நிறுத்திவிடக்கூடாதா என்று கேட்டேவிட்டார். காரியதரிசி ராஜகோபாலன் ஏற்கனவே நிறுத்தியாகிவிட்டதென்றும் அரங்குக்கு வெளியே இன்னும் குளிர் அதிகம் என்றும் கூறிய பின்னரும் ராமநாதனுக்குத் திருப்தி ஏற்படவில்லை! தலையில் போட்டுக் கொள்ளாத குறையாகக் கைகளை அசைத்துவிட்டு 'சிவ சிவ சிவ என ராதா' என்று ஆரம்பித்தாரே பார்க்கலாம்!

அன்று முதல் இரண்டு பாடல்களைப் பாடி முடிப்பதற்கே ஐம்பது நிமிஷங்கள் ஆகிவிட்டன. காரணம் இல்லாமல் போகவில்லை. அலையோசை முன்னுரையில் கல்கி கூறுகிறார், 'கதையை நான் ஆரம்பித்து வைத்தேன். பிறகு கதாபாத்திரங்கள் என்னை ஆட்டிப் படைத்தார்கள்!' என்று. பொன்னியின் செல்வன் நாலு வருஷங்கள் தொடர்ந்ததும் இப்படியே. அதுபோலத்தான் ராமநாதனும் பாட ஆரம்பிக்கிறார். பிறகு பாட்டின் அர்த்த பாவமும் ராக லட்சணங்களும் அவரை ஆட்கொண்டு விடுகின்றன. இதைப் புரிந்து கொள்ளாதவர்கள்தான் அவர் அபிநயிக்கிறார் என்று குறை சொல்வார்கள்.

இப்படிச் சங்கீதம் தம்மை ஆட்கொள்ள ராமநாதன் அனுமதித்தாலும் கச்சேரி குறித்த காலத்தில் முடிய வேண்டும் என்பதிலும் கருத்தாயிருந்தார். மங்களம் பாடவே தமக்கு ஐந்து நிமிஷம் ஆகும் என்பதை மறவாமல் 7:40க்கே தொடங்கி ஏழே முக்காலுக்குப் பட்டாபிஷேகத்துடன் முடித்தார்! கடைசிவரை கர்ணாமிர்தமாய் இருந்த கச்சேரியில் எதையாவது குறிப்பிட்டுச் சொல்லித்தான் ஆகவேண்டுமென்றால் புன்னாகவராளியைக் கூறலாம்.

விறுவிறுப்பாகப் பாடுகிறவர்களுக்கு மிருதங்கம் வாசிப்பதை விடச் சாவகாசமாகப் பாடுகிறவர்களுக்கு வாசிப்பது ரொம்பக் கஷ்டம். அதை சிவராமன் ரொம்பத் திருப்திகரமாக நிறைவேற்றினார். ராமநாதன் அவ்வப்போது இடைவெளிவிட்டுப் பாடும்போது சிவராமன் இட்டு நிரப்புகிற அழகு அலாதி. இவை ஒவ்வொன்றும் ஒரு மினி தனி எனலாம். சில ஆண்டுகளுக்கு முன் அவர் அகலமாகக் கடுக்கன் அணிந்திருந்தபோது எடுக்கப்பட்ட புகைப்படம் ஒன்று நமது கார்யாலய ஃபைலில் உள்ளது. அந்தக் கடுக்

## திருச்செம்பூர்!

''கீழைக் கடற்கரையிலோர் திருச்செந்தூர் மேலைக் கடற்கரையிலோர் திருச்செம்பூர்'' என கி.வா.ஜ. அவர்கள் வருணித்த முருகப்பெருமான் ஆலயம் பம்பாயில் சுமார் ரூ. 40 லட்சம் செலவில் உருவாகி வருகிறது. இந்தத் திருப்பணியைத் தொடங்கியுள்ளது ஸ்ரீ சுப்பிரமணிய சமாஜம். ஆலயம் முழுவதையும் கருங்கல்லினால் அமைப்பதோடு தமிழகத்தின் சிற்பக் கலைக்கு ஓர் எடுத்துக்காட்டாகவும், வெளிநாட்டவர் கண்டு வியக்கும் வண்ணமும் இதை அமைக்க முயற்சி செய்கிறார்கள். 108 படிகள் ஏறி 51 அடி உயரத்தில் உள்ள கோயிலை அடைய வேண்டும். வேறு எங்கும் இதுவரை அமையாச் செயற்கைக் குன்று தயாராகிறது. மேலும் மக்களுக்குப் பயன்படக்கூடிய கல்யாண மண்டபம், நூலகம், ஆம்புலன்சுடன் கூடிய மருத்துவ மனை, தேவாரம், திருப்புகழ் முதலியன பயில வகுப்புகள், வேத பாடசாலை, குழந்தைகளுக்கான நர்சரிப் பள்ளி, இவைகளும் திட்டத்தில் இடம் பெறுகின்றன.

திருச்செம்பூர் திருமுருகன் திருக்கோயில் திருப்பணி நிதிக்காக நடைபெற்ற ''நாடக, நாட்டிய, இசை விழா''வைத் துவக்கி வைத்து பேசுகிறார் தமிழக அறநிலைய அமைச்சர் திரு மு. கண்ணப்பன்.



கண்களை இப்போது சிவராமன் அணிவதில்லை. என்றாலும் வாசிப்பில் அந்த வைரங்களின் ஜொலிப்பை இன்று காண்கிறோம். சாலக்குடி நாராயணசாமி ராமநாதன் பாணியை அப்படியே பின்பற்றி வயலினைப் பாராட்டுக்குரிய முறையில் அளவோடு கையாண்டார்.

ஞாயிற்றுக்கிழமை காலை ரமணியின் மகன் தியாகராஜன் அப்பாவுடன் சேர்ந்து வாசித்தான். பாலசுப்பிரமணிய சங்கீத சபாவின் முத்திரையான வேலேந்திய அருட்கரம் பின்னாலிருந்தபடி சிறுவனை ஆசீர்வதித்துக் கொண்டிருந்தது. நீதிபதி கே.எஸ். வெங்கடராமன் வழக்கம்போல் கண்களை மூடிக் கொண்டு ரசிக்கையில் சிறுவனின் மோகன ராக ஆலாபனைக்கு இரண்டு இடங்களில் ஆஹாகாரம் செய்தார். 'வசிஷ்டர்' வாயால் இவ்வளவு சொன்னால் போதாதா?

கீர்த்தனையில் சுவரப் பிரஸ்தாரங்களின் போது பாலகனைக் கையைப் பிடித்து அழைத்துச் செல்வது போல் பாலக்காடு மணி அய்யர் வாசித்து நடத்திச் சென்ற அழகை என்னென்பது!

ராகங்களை அத்தனை அழகாக வாசிக்கக் கற்றுக்கொண்டிருக்கும் குழந்தையைப் பக்கத்தில் வைத்துக் கொண்டு ரொம்பவும் இடக்கு முடக்கான தகிங்கிணத் தோம்களை அமைத்து ரமணி சுவரப் பிரஸ்தாரங்களைச் செய்ய வேண்டியதில்லை. கச்சேரியும் பள்ளிக்கூடப் பரீட்சை போல் தோன்றிப் பாலகனை அச்சுறுத்திவிடலாம். பரீட்சைக்குப் பயப்படுகிற பிள்ளை இல்லை என்றால் நமக்கு ஆட்சேபணை இல்லை சுவாமி. வெளுத்து வாங்குங்கள். இதிலென்ன ஸி. பி. ஐ. விசாரணையா நடக்கப் போகிறது?

அன்று ரமணியின் ரேவாணி அசாத்தியம் என்றால் வீரராகவன் தானம் வாசித்த போது அதில் திருப்பாற்கடலின் இன்சுவை இருந்தது!

டி. டி. கிருஷ்ணமாச்சாரி அரங்கத்தில் அகாதமி நிகழ்ச்சிகளை இந்த ஆண்டு ஆரம்பித்து வைத்த திரு வி. சுப்பிரமணியம் சங்கீத விழாக்கள் மாவட்டத் தலைநகர்களிலும் நடக்கலாம் என்று கூறிய யோசனை வரவேற்புக்குரியது. பல கச்சேரிகளில் சபை நிறையாமல் போவதற்கு ஒரே சமயத்தில் சென்னையிலேயே ஏழெட்டு விழாக்கள் நடப்பதும் ஒரு காரணம். வி. எஸ்.ஸின் யோசனைப்படி வெவ்வேறு கால கட்டங்களில் தெற்கே பல ஊர்களில் உள்ள சபாக்கள் கலை விழாக்களை ஏற்பாடு செய்ய அதற்குச் சென்னையில் உள்ள கலை நிறுவனங்கள் பல விதங்களில் ஒத்துழைக்கலாம்.

வி. எஸ். கூறிய மற்றொரு கருத்துத்தான் சிறிதும் ஏற்பதற்குரியதாய் இல்லை. கர்நாடக சங்கீதத்தின் மவுசு குறைந்து வருவதற்கு சாகித்தியங்கள் அதிகமாயில்லாதது ஒரு காரணம் என்கிறார்! பாடினதையே திரும்பத் திரும்பப் பாடுவதால் அலுப்புத் தட்டுவதாயிருக்கலாம் என்றும் கூறியுள்ளார்! மதுவிலும் சங்கீதத்திலும் பழசுக்குச் சுவை மிகுதி. மேலும் இந்தச் சாகித்தியங்களெல்லாம் பாப் இசை போல் ஒரே மாதிரிப் பாடப்படுபவையல்ல. ஒரே பாட்டைப் பல்வேறு வித்வான்கள் தத்தமது பாணியைக் கையாண்டு பாடும்போது புதுப் புது உணர்வுகளை நம்மிடம் தோற்றுவிக்கிறார்கள். அது போக சாகித்தியங்களுக்கு இங்கே பஞ்சமும் இல்லை. அந்நாளைய வாக்கேயக்காரர்களின் சாகித்தியங்களிலேயே இன்னும் பாடப்படாதவை எவ்வளவோ இருக்கின்றன. அதோடு புதுப் புது சாகித்தியகர்த்தாக்களும் தோன்றிய வண்ணம்தான் இருக்கிறார்கள்.

பாப் இசை இன்று கொடி கட்டிப் பறக்கிறது; கர்நாடக இசைக்கு மவுசு குறைந்து விட்டது என்பதை ஒப்புக்கொள்வதானால், இதில் முக்கியமான வில்லன் அகில இந்திய ரேடியோதான். அதை அமைச்சர் கூறாது விடலாம்; ஆனால் நமக்கு நிலவரம் தெரியும்.

இந்நாளைய பரத நாட்டியத்தில் பொதுவாகவே நடனத்தை விட நளினத்துக்குத்தான் முக்கியத்துவம் தரப்படுகிறது. இதன் பிரதிபலிப்பாகவே சுதாராணி ரகுபதி ஆடியபோது அகாடமி அரங்கில் விசிறி (Pedestal Fan) சுழன்றுகொண்டிருந்தது எனலாம். இந்த அடிப்படையை ஒப்புக்கொண்டு விட்டோமானால் அப்புறம் சுதா, ராணியாகவே அரங்கத்தை ஆக்கிரமித்துக் கொண்டிருந்தார் என்று கூறத் தயக்கம் இராது. சபையின் எந்த மூலையிலிருந்து பார்த்தாலும் பளிச்சென்று தெரிகிற தீட்சண்யம் மிகுந்த அகன்ற கண்கள் பாவப் பொலிவுக்கு ரொம்ப உதவுபடி. அத்துடன் அபிநயங்களில் அழகுணர்ச்சியுடன் கூடிய அரிய கற்பனைகளை அபரிமிதமாகவே காண்கிறோம். உதாரணம் அம்புஜம் கிருஷ்ணாவின் சின்னச் சின்ன பாதம் என்ற பாடலுக்கான அபிநயம்.

—குட்டி கிருஷ்ணன்

---

சென்னையில் ''முத்தமிழ்ப் பேரவை'' என்னும் புதிய கலைநிறுவனத்தை முதலமைச்சர் துவக்கி வைத்தார். பேரவையின் சார்பில் கருணாநிதிக்கு ''இயல் செல்வம்'' என்னும் பட்டத்தினை ஆளுநர் வழங்கினார். திருவீழிமிழலை நடராஜ சுந்தரம் பிள்ளைக்கும், எம். எல். வசந்தகுமாரிக்கும் ''இசைச் செல்வம்'' என்னும் பட்டத்தினையும், வழுவூர் ராமையா பிள்ளைக்கு ''நாட்டியச் செல்வம்'' என்னும் பட்டத்தினையும் திரு கே. கே. ஷா வழங்கினார். கலைச் செல்வர்கள் அனைவருக்கும் நமது இதயங்கனிந்த வாழ்த்துக்கள்.





# பொன்னியின்

## 23. சத்திய சோதனை

### மெய்யிலே மொழிச் சோதனை: மொழியிலே மெய்ச் சோதனை

கல்கியின் ''நவசக்தி'' நாட்களின் போது, மகாத்மா காந்தியின் சுய வரலாற்றுக் கட்டுரைகள் ''யங் இந்தியா'' பத்திரிகையில் வந்து கொண்டிருந்தன. அந்தக் கட்டுரைகளைத் தமிழாக்கி ''நவசக்தி''யில் வெளியிடும் பொறுப்பும் பெருமையும் கல்கிக்கு வாய்த்திருந்தன.

''பொதுவாக என்னுடைய மொழி பெயர்ப்பு திரு வி.க.வுக்கு மிகவும் பிடித்திருக்கும்'' என்று கல்கி, திரு வி.க பற்றிய தமது கட்டுரை ஒன்றில் எழுதியிருக்கிறார். அத்துடன் அதில், ஒரு சொல்லின் தமிழாக்கம் சம்பந்தமாய் அவருடன் நிகழ்ந்த உரையாடலையும் எடுத்துக் கூறியிருக்கிறார்:

ஒருமுறை மகாத்மா தமது கட்டுரை ஒன்றில், பரம்பொருளைக் குறிப்பிடும் இடத்தில், ''வார்ட் சிவா'' என்று எழுதியிருந்தார். தமிழ் மொழிபெயர்ப்பில் நான் ''சிவபெருமான்'' என்று நியாயமாய்ப் போட்டிருக்க வேண்டும். எதனாலோ — காரணம் எனக்கே தெரியவில்லை. — ''இறைவன்'' என்று எழுதி விட்டேன். ஆங்கிலத்தில் கட்டுரையைப் படித்துத் தமிழ் மொழிபெயர்ப்பையும் படித்த திரு வி. க.வுக்கு என் பேரில் சந்தேகம் உண்டாகி விட்டது.

அந்தரங்கமாக என்னை அழைத்து என்னுடைய மதக் கோட்பாடுகளைப் பற்றிக் கேட்க ஆரம்பித்தார். ''உனக்கு எந்த மதத்தில் அதிகப் பற்று?'' என்றார். ''ஒரு மதத்திலும் எனக்குப் பற்றுக் கிடையாது. மதங்களைப் பற்றிய உண்மையை இன்னும் நான் நன்கறியவில்லை'' என்றேன். ''எந்த மதத்தின்பேரிலாவது கோபம் உண்டா?'' என்று கேட்டார். ''இல்லவே இல்லை; மதம் என்னை என்ன செய்தது?'' என்றேன். ''ஒருவேளை சிவனை உனக்குப் பிடிக்காதோ?'' என்று கேட்டார். ''சிவனை எனக்கு ரொம்பப் பிடிக்கும். அவருடைய நெற்றிக் கண்ணை மட்டும்தான் அவ்வளவாகப் பிடிக்காது. இதெல்லாம் எதற்காகக் கேட்கிறீர்கள்?'' என்றேன். அவர் விவரம் சொன்ன பிறகு, ''சிவன் என்பதற்குப் பதிலாக 'இறைவன்' என்று போட்டதனால் சிவனைத் தூக்கித்தானே வைத்திருக்கிறேன்! சிவன்தான் இறைவன் என்று ஏற்படுகிறதல்லவா?'' என்று சொல்லிச் சமாளித்துக் கொண்டேன். திரு வி. க. வுக்கு உண்மையில் மத வேற்றுமை உணர்ச்சியே கிடையாது. எனக்கு ஒருவேளை அந்தமாதிரி பைத்தியக்கார வேற்றுமை உணர்ச்சிகள் இருக்குமோ என்று சந்தேகித்துத்தான் மேற்கண்டவாறு குறுக்கு விசாரணை செய்தார். அம்மாதிரி ஒன்றும் இல்லை என்று அறிந்ததும் பெரிதும் திருப்தி அடைந்தார்.

(கல்கி இதழ்: 10-8-'43)

சத்தியசோதனை பற்றிய இந்த உரையாடல், மொழிச் சோதனையில்



■ ''ஸ்ரீமான் நரசிம்மன் ... வேகமாக வந்து அவ... சரமான காரியம்... என்று அழைத்... தார். காந்திஜி பேச... வதற்காக அமர்ந்... இருந்த மேடைக்... குக் கொண்டு... வந்து விட்டார்!''

■ ''சத்திய சோதனை'' என எஸ். கணேசன் வெளியிட்டார். இவர்தான் பின்னர் விடுதலை வேட்கையை முழங்கிய சுதந்திரச் சங்கு பத்திரிகை நடத்தியவர்.

■ மகாத்மா காந்தியின் சுய வரலாற்றுக் கட்டுரைகளைத் தமிழாக்கி நவசக்தியில் வெளியிடும் பொறுப்பும் பெருமையும் கல்கிக்குக் கிடைத்தது.







# புதல்வர்

**சுந்தா**

தொடங்கி, ஆத்மசோதனையில் முடிந்தது!

இன்னும் சில வேளைகளிலும் இதுபோன்ற உரையாடல் நடந்திருக்கலாம். ஆனால் கல்கியின் எளிய தமிழ் நடையைத் திரு வி. க. சிறிதும் மாற்ற முயலவில்லை. கல்கியும் திரு வி.க.வின் கடின நடையைப் பின்பற்ற முயலவில்லை என்பதைச் சொல்ல வேண்டியதே இல்லை.

ஓர் அறிஞர் சொன்னதுபோல் திரு வி. க. வின் நடை கடினமாய் இருந்தபோதிலும் அதிலேபொருட்தெளிவு, சொல்லழகு, உணர்ச்சி விரைவு, உண்மைப் பொலிவு ஆகிய பண்புகள் உண்டு. இந்தப் பண்புகளை எல்லாந்தான் கல்கி தமது எழுத்தில் சேர்த்துக் கொள்ள முயன்றார். அந்த முயற்சியில் மேலும் மேலும் அதிகமாக வெற்றி பெற்றார்.

மகாத்மா காந்தியின் கட்டுரைகளுக்குக் கல்கி செய்த மொழிபெயர்ப்பு, முதலில் ''தென்னாப்பிரிக்கா சத்தியாக்கிரஹம்'' என்ற தலைப்பின் கீழும், பிறகு ''காந்தியடிகள் — உண்மையோடியைந்த வாழ்க்கை'' என்பதன் கீழும் வெளியாயின. இரண்டாவது தலைப்பைத் திரு வி. க. கொடுத்திருக்க வேண்டும்.

அந்த மொழிபெயர்ப்புக் கட்டுரைகளின் முதல் தொகுப்பு 1927ல் வெளியானபோது, ''சத்திய சோதனை'' என்று அதற்குக் கல்கி பெயர் கொடுத்தார் — மூல நூலின் "My Experiments with Truth" என்ற பெயரை ஒட்டியும், அதைவிடச் சுருக்கமாகவும். அந்தப் புத்தகத்தை ''மகாத்மா காந்தி எழுதியது — ரா. கிருஷ்ணமூர்த்தி மொழிபெயர்த்தது'' என்ற முகப்பு வர்ணனையுடன் எஸ். கணேசன் வெளியிட்டார். அவர்தான் பின்னர் விடுதலை வேட்கையை முழக்கிய ''சுதந்திரச் சங்கு'' பத்திரிகையை நடத்தியவர்.

''சத்திய சோதனை''யின் இரண்டாம் பாகத்தை 1932ல் கணேசன் வெளியிட்டார். அதில் அடங்கிய அத்தியாயங்களை நவசக்தியை விட்டு விலகிய பிறகு கிருஷ்ணமூர்த்தி மொழிபெயர்த்திருக்க வேண்டும்.

இந்தப் புத்தகத்தின் அச்சுத் தாள்களைத் திரு வி. க. பார்வையிட்டு உதவினார் என்பது ஒரு சுவையான செய்தி. இதன் முதற்பதிப்பில் வெளியான பதிப்பாசிரியர் குறிப்பில், இதுவும் இன்னும் சில ரசமான விவரங்களும் உள்ளன:

மகாத்மா காந்தியின் நூல்கள், கட்டுரைகள், உபந்நியாசங்கள் ஆகியவற்றைப் பற்பல இடங்களிலிருந்தும் திரட்டிக்

■ தென்னாட்டில் நடந்த நீண்டகால ஹிந்திப் பிரசாரத்தின்போது ராஜாஜிக்குத் துணைவராகவும் தேவதாஸ் காந்திக்கு மொழிபெயர்ப்பாளராகவும் கல்கி பிரயாணம் செய்கையில் [illegible] எடுத்த படம். ராஜாஜி அபூர்வமாக வெளியிட்ட விருப்பத்தின்பேரில் எடுக்கப்பட்ட அபூர்வமான படம். இதை எடுக்க ஏற்பாடு செய்து, இங்கே வெளியிட உதவிய (வலது கோடியில் அமர்ந்திருக்கும்) ஆர். என். கோவிந்தசாமி ரெட்டியார், ராஜாஜியின் தலைமையில் உப்புச் சத்தியாக்கிரகத்தில் ஈடுபட்டுச் சிறைபுகுந்தார்.



கூடுமான வரை புத்தக வடிவில் வெளியிட வேண்டும் என்பது எனது நீண்ட நாள் அவா வாகும். எனது இந்த நோக்கத்துக்கு அடிகளின் அநுமதியும், ஆசீர்வாதமும் கிடைத்திருக்கின்றன என்பதைத் தமிழ் நாட்டாருக்கு மகிழ்ச்சியுடன் தெரிவித்துக்கொள்கிறேன்.... இப்போது ''சத்திய சோதனை'' என்னும் மகாத்மா காந்தியின் ஸ்வ சரிதத்தைத் தமிழில் வெளியிடும் பாக்கியம் எனக்குக் கிடைத்திருக்கிறது...

இதனைத் தமிழில் மொழிபெயர்த்த நண்பர், மூலத்தினின்று பொருள் மாறுபாடு இல்லாமலும்; மொழிபெயர்ப்பென்று தோன்றாது தமிழ் நடையாகவே தொனிக்கும் வண்ணமும், தமிழ் வரம்புக்குள் நின்று எல்லாருக்கும் எளிதில் விளங்கக் கூடியவாறும் தமது கடனை ஆற்ற இயன்றவரை முயற்சி செய்திருக்கிறார். இந்நூலின் அச்சுத் தாள்களை அவ்வப்போது பார்வையிட்டு உதவிய ''நவசக்தி'' ஆசிரியர் ஸ்ரீமான் திரு வி. கல்யாணசுந்தர முதலியாருக்கு நான் பெரிதும் கடமைப்பட்டவனாவேன்.

''சத்திய சோதனை'' மொழிபெயர்ப்பைக் கல்கி ''நவசக்தி'' ஆசிரியர் தமக்கிட்ட வேலையாக மட்டும் செய்யவில்லை. சத்திய நிலையில் நின்று மகாத்மா புரிந்த சோதனைகளையும் சாதனைகளையும் தமிழ் மக்களுக்கு அறிவிக்க வேண்டும் என்ற ஓர் ஆசைப் பணியாகவும் செய்தார். இந்தப் பணியின் மூலம் எத்தனையோ தமிழர்கள், குறிப்பாக, ஆங்கில மூலத்தைப் படிக்க இயலாத தமிழர்கள் பயன் அடைந்தார்கள். காந்தியைப் பற்றியும், காந்தியத்தைப் பற்றியும் புதிதாகவோ, மேலும் நன்றாகவோ அறிந்து கொண்டார்கள்.

கல்கி அடைந்த பயன்களும் சில உண்டு. மொழி மாற்றம் செய்வதற்காக அவர் மூலத்தைக் கருத்தூன்றிப் படித்ததால், மகாத்மாவின் உள்ளக் கருத்தைத் தமது உள்ளத்துடன் கலந்து கொண்டது ஒன்று. முன்னிலும் செவ்வையாக ஆங்கிலத்தை அறிந்து கொண்டு, திருத்தமாக, எளிய தமிழில் எழுதப் பயிற்சி அடைந்தது மற்றொன்று. நாலு ஆண்டுகளாய் அந்த மொழி பெயர்ப்புப் பணியில் அவர் அடைந்த மனப் பழக்கம் பின்னால் அண்ணலின் நெறிகளையும், செயல்களையும் பற்றி, அருந்தமிழில் எத்தனை எத்தனையோ எழுதுவதற்கு ஆதாரமாய் அமைந்தது: ''மாந்தருக்குள் ஒரு தெய்வம்'' என்ற மகுடத்துடன் அவர் எழுதிய காந்தி மகான் வரலாற்றுக்கும் ஆதாரம் ஆயிற்று.

மகாத்மா காந்தியின் கட்டுரைகளை மட்டுமின்றி, அன்னாருடைய பேச்சையே உடனுக்குடன் மொழிபெயர்க்கும் அரிய வாய்ப்பு ஒன்று, சில ஆண்டுகளுக்குப் பிறகு கல்கிக்குக் கிடைத்தது. திருச்செங்கோடு காந்தி ஆசிரமத்துக்கு 1934 பிப்ரவரி மாதத்தில் அண்ணல் வருகை புரிந்தபோது கிடைத்த அந்த வாய்ப்பை, கல்கியே மிக்க பெருமையுடன் — அந்தப் பெருமையை நகைச்சுவையில் மறைத்து — இப்படி எழுதினார்:

காலைப் பிரார்த்தனைக்குப் பிறகு, ஸ்நான பானங்கள் முடிந்தும் முடியாமலும் இருக்கும் போதே (ராஜாஜியின் குமாரர்) ஸ்ரீமான் நரசிம்மன் வேகமாக வந்து அவசரமான காரியம் என்று அழைத்தார். என்னமோ ஏதோ என்று விரைந்து சென்றேன். காந்திஜி பேசுவதற்காக அமைந்திருந்த மேடையில் கொண்டு வந்து சேர்த்து, ''மொழிபெயர்ப்பு செய்ய வேண்டும்'' என்று தெரிவித்தார். ''இதென்ன? தலைவர்கள் சொற்படி யெல்லாம் நடப்பது போதாதென்று, தலைவர்களுடைய புதல்வர்கள்கூட நம்மைக் கட்டளையிடுவதா யிருந்தால் உலகம் வாழத் தகுதியற்றதாக ஆகிவிடுமே!'' என்று எண்ணி, அவருடன் மறுத்துப் பேசலாமென்று உத்தேசிப்பதற்குள் காந்திஜி வந்து விட்டார். இவ்வாறு நிலைமை நெருக்கடியாய்ப் போயிற்று. இதன் பயன் என்னவென்றால், அன்று காந்திஜி என்ன பேசினார் என்பது ஓர் அட்சரங்கூட எனக்கு ஞாபகம் இல்லை. அப்போது ஏதோ இயந்திரத்தைப் போல் மொழிபெயர்த்தேனே, அவ்வளவுதான். அவ்வாறின்றி உட்கார்ந்து கேட்டிருந்தேனானால் இப்போது ஓர் அட்சரங்கூட விடாமல் அவர் பேசியதை உங்களுக்கு அறிவித்திருக்கக் கூடும். (ஆ. வி. 11-3-'34)

''அன்றைய தினத்தை ''என் வாழ் நாளில் ஒரு முக்கிய சுபதினமாகும்'' என்று குறிப்பிட்டுக் கல்கி மகிழ்ந்திருக்கிறார். அந்த மகிழ்ச்சிக்குக் காரணம் காந்தி மகானின் திருவாக்கைத் தமிழாக்கிச் சொன்னது மட்டும் அல்ல; அன்று காலைப் பிரார்த்தனைக் கூட்டத்தில் மகாத்மாவின் முன்னிலையில் அவர் பாடியதும் ஆகும்!

அன்று காலை நாலு மணிக்கு எழுந்து பிரார்த்தனைக்குச் சென்றோம். ''பிராதஸ்மராமி'' என்று தொடங்கும் சுலோகங்கள் சொல்லப்பெற்றன. பிறகு ஸ்ரீமதி மீராபென் ''நாராயணா'' நாமாவளியை முறை வைத்துச் சொல்ல, மற்றவர்களும் பாடினார்கள். பின்னர் ஆச்சாரியார் கட்டளையின் பேரில் ''மாற்றறியாத செழும் பசும் பொன்னே'' என்று தொடங்கும் இராமலிங்க சுவாமிகளின் அருட்பாவை ஒரு பேர்வழி மிகவும் பக்தியுடன் பாடினார். பேர்வழி யார் என்று

உங்களுக்கு நான் சொல்லப் போவதில்லை. துப்பறிபவர் வைத்துக் கண்டுபிடியுங்கள்.

(ஆ.வி. 11-3-34)

இதற்கு முன் காந்தி மகன் காந்தியின் பேச்சுத் தொடர் ஒன்றைத் தமிழாக்கிச் சொல்லும் வாய்ப்பு ஒன்றும் கல்கிக்குக் கிடைத்தது:

காந்தி மகன் ஸ்ரீ தேவதாஸ் காந்தியை முதன் முதலாக 1933ஆம் வருஷ ஆரம்பத்தில் நான் சந்தித்தேன். முக்கியமாகத் தீண்டாமை விலக்குப் பிரசாரம் செய்யும் நோக்கத்துடன் ஸ்ரீ தேவதாஸ் தமிழ்நாட்டுக்கு விஜயம் செய்திருந்தார். அச்சமயம் சிறையிலிருந்த மகாத்மா காந்தி, ''தீண்டாமை ஒழிப்பு வேலை தீவிரமாக நடைபெறாவிட்டால் உண்ணாவிரதம் இருந்து உயிரை விடுவேன்'' என்று செய்தி அனுப்பி யிருந்தார். இந்தச் செய்தி தேசத்தையெல்லாம் கலக்கியிருந்தது. ஸ்ரீ தேவதாஸின் மனத்தை அச்செய்தி என்ன பாடு படுத்தியிருக்கும் என்று சொல்ல வேண்டியதில்லை. எனவே மகாத்மாவின் உயிரைக் காப்பாற்றும் பொருட்டுத் தம்மாலான திருப்பணியைச் செய்வதற்காக ஸ்ரீ தேவதாஸ் தமிழ்நாட்டுக்கு வந்தார். சமீபத்திலேதான் சிறையிலிருந்து விடுதலையாகியிருந்த ராஜாஜியும் ஸ்ரீ தேவதாஸின் சுற்றுப் பிரயாணத்தில் சேர்ந்து கொண்டார்.

காந்தி குமாரரின் பிரசங்கங்களைக் கூட்டங்களில் மொழிபெயர்ப்பதற்காக மேற்படி பிரயாணத்தில் கலந்து கொள்ளும்படி எனக்குக் கட்டளை வந்தது.

காஞ்சீபுரத்தில் யாத்திரை ஆரம்பமாகித் திருவனந்தபுரத்தில் முடிவடைந்தது.

பெரிய மகாத்மாவின் புதல்வர் தாம் என்கிற எண்ணம் ஸ்ரீ தேவதாஸின் மனத்தில் இருந்ததோ என்னமோ தெரியாது. பேசுவதிலும் பழகுவதிலும் கொஞ்சம் கூட அதைக் காட்டிக் கொள்ளவில்லை. அவருடைய பேச்சின் இனிமை, காலஞ்சென்ற புஷ்பவனம் ஐயரின் சங்கீதத்தின் இனிமையை ஒத்திருந்தது. அவருடைய இளம் முகத்தில் இயற்கையாகக் குடிகொண்டிருந்த சாந்தமும் புன்னகையும் கைதேர்ந்த தமிழ்நாட்டுச் சிற்பி அமைத்த நடராஜ விக்கிரகத்தின் திருமுகத்தில் பொலியும் சாந்தத்தையும் புன்னகையையும் ஒத்திருந்தன.

(கல்கி இதழ் 27-4-'47)

மகாத்மாவின் சுய சரிதைக்குக் கல்கி செய்துள்ள தமிழாக்கம் எத்தரமானது? இதை மதிப்பிடுவதற்கு, மொழிபெயர்ப்புக் கலை பற்றி மு. அருணாசலம் வெளியிட்டுள்ள கருத்துக்கள் உதவியாய் இருக்கும். தமிழ் இலக்கிய வரலாற்றை நூற்றாண்டு வாரியாக இப்போது எழுதிக் கொண்டிருக்கும் இந்த அறிஞரைக் கல்கி, ''தமிழுக்காகவே உயிர் வாழ்கிறவர்'' என்றும், ''புலவருக்குப் புலவர், ரசிகருக்கு ரசிகர், எழுத்தாளருக்கு எழுத்தாளர், பதிப்பாளருக்குப் பதிப்பாளர்'' என்றும் 1945ல் பாராட்டி எழுதினார். இத்தகைய பாராட்டுக்கு உரியவர், ஆங்கிலேயர் ஆட்சிக் காலத்தில் அரசாங்க மொழி பெயர்ப்பாளரா யிருந்த காரணத்தால், ஆங்கிலத்திலிருந்து தமிழாக்கம் செய்வது எப்படி என்பதை அனுபவத்தால் சொல்லும் தகுதியும் பெற்றிருந்தார்.

ஆங்கிலத்திலிருந்து மொழிபெயர்ப்பதென்றால் வார்த்தைக்கு வார்த்தை தமிழைப் பெய்து நிரப்பி விடுவது மொழிபெயர்ப்பாகாது. முதனூலின் கருத்துப் பிறழாமல் தமிழிலே, தமிழ் மரபு சிறிதும் வழுவாமல் சொல்வதே சரியான மொழிபெயர்ப்பு. மூலத்தில் உள்ள ஒரு சொல்லுக்குத் தமிழிலே பத்துச் சொற்கள் போட வேண்டியிருக்கலாம்; அல்லது பத்துச் சொற்களுக்கு ஒரு சொல்லைப் போட வேண்டி யிருக்கலாம். வாக்கியங்களை முன் பின்னாகவும் தலைகீழாகவும் மாற்ற வேண்டி யிருக்கலாம். அப்படி மாற்றினதால் ஒன்றும் கெட்டுவிடாது. முதனூலில் உள்ள அவ்வளவையும் பொருள் மாறுபடாமல் தமிழில் சொல்லிவிட்டால், அதுதான் சரியான மொழிபெயர்ப்பாகும்.

(இன்றையத் தமிழ் வசன நடை-நூல் 1945)

இந்தக் கருத்துக்களை மனத்தில் கொண்டு, ''சத்திய சோதனை''யின் சில பகுதிகளை மூலத்துக்குப் பக்கத்தில் பொருத்திப் பார்ப்போம். முதலாவதாக, கல்கி போற்றிய இரு பெருந் தலைவர்களின் முதல் சந்திப்பு பற்றியது:

Rajagopalachari had then only recently left Salem to settle down for legal practice in Madras at the pressing invitation of friends like the late Sjt. asturi Ranga Iyengar, and that with a view to taking a more active part in public life. It was with him that we had put up in Madras. This discovery I made only after we had stayed with him for a couple of days. For, since the bungalow that we were staying in belonged to Sjt. Kasturi Ranga Iyengar, I was under the impression that we were his guests. Mahadev Desai, however, corrected me. He very soon formed a close acquaintance with Rajagopalachari, who, by his innate-shyness, kept himself constantly in the background. But Mahadev put me on my guard. "You should cultivate this man", he said to me one day. And so I did.

இராஜகோபாலாச்சாரியார் சமீபத்தில் தான் சேலத்திலிருந்து சென்னைக்கு வக்கீல்

தொழில் நடத்த வந்திருந்தார். காலஞ்சென்ற ஸ்ரீ கஸ்தூரிரங்க அய்யங்கார் முதலியோர் அவரை வற்புறுத்தி அழைத்திருந்தார்கள். பொது வாழ்வில் இன்னும் தீவிரமாக ஈடுபட வேண்டும் என்பது அவரது நோக்கம். சென்னையில் அவருடைய விருந்தினராகவே நாங்கள் தங்கினோம். ஆனால், இரண்டு மூன்று நாட்கள் ஆனபிறகே இதை நான் கண்டுபிடித்தேன். ஏனெனில் நாங்கள் தங்கியிருந்த வீடு ஸ்ரீ கஸ்தூரிரங்க அய்யங்காருக்குச் சொந்தமாகையால், நாங்கள் அவருடைய விருந்தினர் என்று எண்ணியிருந்தேன். மகாதேவ தேசாய் எனக்கு உண்மை தெரிவித்தார். அவர் விரைவில் இராஜகோபாலாச்சாரியாருடன் நெருங்கிய பழக்கம் கொண்டார். இராஜகோபாலாச்சாரி, தமக்கு இயற்கையான சங்கோஜ குணத்தினால் எப்போதும் பின்னாலேயே இருந்தார். ஆனால் மகாதேவ் எனக்கு எச்சரிக்கை செய்தார். "இந்த மனிதரிடம் நீங்கள் பழக்கம் செய்து கொள்ள வேண்டும்" என்று அவர் ஒரு நாள் கூறினார். அவ்வாறே செய்தேன்.

### சத்தியம்

To see the universal and all pervading spirit of truth face to face one must be able to love the meanest of creation as one self. And a man who aspires after that cannot afford to keep out of any field of life. That is why my devotion to truth has drawn me into the field of politics; and I can say without the slightest hesitation, and yet in all humility, that those who say that religion has nothing to do with politics do not know what religion means.

புவனம் அனைத்திலும் ஊடுருவி நிற்கும் சத்தியப் பொருளை நேருக்கு நேர் காண விழையும் ஒருவன், படைப்பில் மிகத் தாழ்ந்த படியில் உள்ள உயிரையும் தன்னைப் போலவே நேசிக்கும் ஆற்றல் பெற வேண்டும். அவன் வாழ்க்கையில் எந்தத் துறையிலிருந்தும் விலகி நிற்க முடியாது. ஆகையினாலேயே, சத்தியத்தில் எனக்குள்ள பற்று என்னை அரசியல் துறைக்குக் கொண்டு வந்து சேர்த்தது. சமயத்துக்கும் அரசியலுக்கும் சம்பந்தம் இல்லை என்று கூறுவோர் சமயத்தைப் பற்றி ஒன்றும் அறியார் என்று தாழ்மையுடன், ஆனால் சிறிதும் தயக்கம் இன்றிக் கூறுகிறேன்.

### கஸ்தூர்பாய்

My ambition was to make her live a pure life, learn what I learnt and identify her life and thought with mine. I do not know whether Kasturba had any such ambition. She was illeterate. By nature she was simple, independent, persevering and, with me atleast, reticent. She was not impatient of her ignorance and I do not recollect my studies having ever spurred her to go in for a similar adventure. I fancy therefore, that my ambition was all onesided. My passion was entirely centered on one woman and I wanted it to be reciprocated. But even if there were no reciprocity, it could not be all unrelieved misery, because there was active love on one side atleast.

அவளைத் தூய வாழ்க்கை நடத்தச் செய்ய வேண்டும் என்றும், நான் கற்பனவெல்லாம் அவளும் கற்று எங்கள் இருவரின் வாழ்க்கையும் எண்ணமும் ஒன்றாகிவிட வேண்டும் என்னும் ஆவல் கொண்டேன். கஸ்தூரி பாய்க்கு இத்தகைய ஆவல் ஏதேனும் இருந்ததா என்று எனக்குத் தெரியாது. அவள் எழுத்து வாசனை அறியாதவள். கபடமற்ற தன்மையும், சுயேச்சை விருப்பமும், விடாமுயற்சியும் என் விஷயத்தில் மட்டுமேனும் சங்கோசமும் அவளுடைய இயற்கைக் குணங்கள். தான் கல்வி அறிவு இல்லாதவளாய் இருந்தது குறித்து அவளுக்குக் கவலையே இல்லை. என்னுடைய படிப்பும்கூட அவளுக்கு இவ்விஷயத்தில் ஊக்கம் ஊட்டவில்லை. எனவே, அவளுடைய அபிவிருத்தியில் நான் கொண்டிருந்த ஆசை என் வரையிலேயே நின்றதாகத் தோன்றுகிறது. நான் முழு மனத்துடனும் அவள் ஒருத்தியையே காதலித்தது போல் அவளும் என்னைக் காதலிக்க வேண்டும் என விரும்பினேன். ஆனால் ஒரு பக்கமேனும் உண்மை அன்பு இருந்தபடியால் — பதிலுக்கு அன்பு கிடைக்கா விட்டாலும் — வாழ்க்கை முழுதும் துன்ப மயமாய் இருந்திருக்க முடியாது.

ஆங்கிலத்திலிருந்து கல்கி தமிழாக்கிய வேறு இரண்டு நூல்களையும் இங்கே குறிப்பிடலாம்.

ஒன்று: "கைராட்டை, அதன் சரித்திரமும் புத்துயிரும்". எஸ். வி. புணதாம்பேக்கர், என். எஸ். வரதாச்சாரி ஆகியோர் மூல ஆசிரியர்கள். அகில இந்திய சர்க்கா சங்கத்தின் திருப்பூர் காரியாலயம் 1927ல் வெளியிட்டது. 172 பக்கங்கள்.

இரண்டு: "யுவ பாரதம் அல்லது இந்திய தேசிய இயக்கத்தின் வரலாறு" மூல ஆசிரியர், லாலா லஜபதி ராய். 364 பக்கங்கள் கொண்ட இதன் முதற் பதிப்பை இராஜபாளையத்திலிருந்து 1937ல் பூ. ச. குமாரசாமி ராஜா வெளியிட்டார். இரண்டாம் பதிப்பைச் சென்னை மங்கள நூலகம் 1957ல் வெளியிட்டது.

மூன்றாவதான ஒரு மொழிபெயர்ப்பு நூலைப்பற்றிப் பிறிதொரு அத்தியாயத்தில் விரிவாகவே காண்போம்.

(தொடரும்)

பால் குடிக்க
மறுக்கும் பிள்ளைக்கு
பல்சுவையுள்ள
கஸ்டார்டு தாருங்கள், அது
அள்ளிப் பருகுவதைப்
பாருங்கள்!



# தலையில் சுமந்து கொண்டா?

**எம்.எஸ்.கல்யாணசுந்தரம்**

ஜில்லா கலெக்டர் வெண்டர்டன் பறவை இயல் நன்கு கற்றவர். புஸ்தகப் படிப்பு மட்டுமல்ல, அனுபவ அறிவும் அவருக்குண்டு.

ஒரு சமயம் வெண்டர்டன் தம் தாசில்தார் துரைசாமி பிள்ளையிடம், "இரண்டு வருஷங்களுக்கு முன் இந்த வட்டாரத்துப் பறவைகளைப் பற்றி 'இண்டியா' பத்திரிகையில் ஒரு கட்டுரை எழுதியிருந்தேனே, படித்தீர்களா?" என்று கேட்டார்.

பிள்ளையவர்கள் அசடு வழிய, "இரண்டு வருஷங்களுக்கு முன்பா? பட்சிகளைப்பற்றியா? நீங்களா? தெரியாதே சார்!" என்று விடையளித்தார்.

அப்பொழுது ஒரு குட்டிக் குமாஸ்தா, சுந்தரேசன், "நினைவிருக்கிறது, ஸார்; ஹாஸ்யம் கலந்த விஞ்ஞானக் கட்டுரை. நன்றாயிருக்கிறது என்று நினைத்துக் கொண்டேன். அந்தப் பிரதி என்னிடம் இருக்கிறது, ஸார்!" என்றான்.

அந்த இடத்தில், அந்த விடையை, அதுவும் இலக்கண சுத்தமான ஆங்கிலத்தில், எதிர்பாராத அவர், முகம் மலர்ந்து, "அப்படியா? அதை எனக்குத் தர முடியுமா? என் தாள் காணாமல் போய் விட்டது" என்று கேட்க, சுந்தரேசன் தயக்கத்துடன், "தருகிறேன், ஸார்; ஆனால் படித்த பிறகு திருப்பிக் கொடுத்துவிடுங்கள். அல்லது நகல் எடுத்துக் கொடுக்கட்டுமா? செய்தித் தாள்களை நான் பத்திரமாய்ச் சேர்த்து வைப்பவன்" என்று சொன்னான்.

கலெக்டர், "புரிகிறது, கொடு. தேதியைக் குறித்துக் கொண்டு சென்னையிலிருந்து வரவழைத்துக் கொள்கிறேன்" என்று சுமுகமாய் விடையளித்தார்.

அடுத்த ஜனவரி இரண்டாம் தேதி சுந்தரேசனுக்குப் புத்தாண்டுப் பரிசு ஒன்று கிடைத்தது. —வெண்டர்டன் அவனைத் தம் 'பெர்சனல்' குமாஸ்தாவாக, நியமித்துக் கடிதம் அனுப்பி விட்டார். இனி வாசம் மதுரைமா நகரில்.

பயணத்துக்குத் தயாராகும்போது வீட்டில் சுந்தரேசனுக்கும் அவன் தாயாருக்கும் ஒரு தகராறு. தினசரிப் பத்திரிகை ஓர் அம்பாரி குவிந்து விட்டது. அதற்கே ஒரு தனி அறை வேண்டியிருக்கும். பழுப்பு நிறமேறிய அத்தனை செய்தித் தாள்களும் மதுரை சென்றன.

வெண்டர்டனுக்கு ஊர் மாற்றம் ஏற்படும்போதெல்லாம் அவர் விசேஷ முயற்சி செய்து சுந்தரேசனையும் தம்முடன் அழைத்துச் சென்றார்.

சுந்தரேசனுக்கு விவாகம் ஆயிற்று. மனைவியின் பெயர் சீதை.

ஒவ்வொரு ஊர் மாற்றத்தின்போதும் பழைய செய்தித் தாள் கட்டுக்களைப் பற்றிய பழைய தகராறு கிளம்பும். சீதை தன் மாமியாருக்கு ஒத்து ஊதுவாள். மாமியார் இறந்த பிறகு இருபுறத்து ஆட்சேபமும் தானே செய்தாள். மற்ற விஷயங்களில் எவ்வளவோ விட்டுக் கொடுக்கும் சுந்தரேசன் இந்த விஷயத்தில் பிடிவாதமாகவே இருந்தான். மாவு சலிக்கப் பத்திரிகைக் காகிதம் கொடுத்தால் அது இரவல்தான், நன்கொடையல்ல. திரிகையின் அடியில் விரிக்க ஒருபோதும் கொடுக்க மாட்டான். சாயங்காலம் வீட்டுக்கு வந்ததும் நினைவாய் அக்காகிதத்தை வாங்கி மாவைத் தட்டி ஊதித் துடைத்துவிட்டு அதை ஒழுங்காய் அடுக்கி வைத்து விடுவான்.

பல வேலை உயர்வுகளுக்குப் பின் சுந்தரேசன், சென்னையிலிருக்கும்போது, ஓய்வு பெற்றார்—உத்தியோகத்திலிருந்து ஓய்வு, ஓயாமல் இன்னும் பத்திரிகைகள், புத்தகங்கள் படிக்க அவகாசம். இதற்கிடையே முதல் இரண்டு புத்திரர்களுக்குச் சென்னையிலேயே வேலை கிடைத்து விட்டது. குடித்தனம் சௌகரியமாக நடக்க ஆரம்பித்தது.

தந்தை உத்தியோக தோரணையை இழந்ததும் உத்தியோகத்தில் அமர்ந்த இரு குமாரர்களுக்குத் தெம்பும், தைரியமும் உண்டாயின; அவர்கள் நாக்குகளுக்குச் சிறகுகள் முளைத்தன. இருவரும் கிழட்டு மாட்டைக் கொட்டத்தில் அடைக்கத் தலைப்பட்டனர். "இந்தப் பத்திரிகைப் பைத்தியம்" விஷயத்தில் மூத்த இரு குமாரர்களுக்கும் தாயின் ஒத்துழைப்பு முழு அளவு கிடைத்தது.

பென்ஷன் தொகையில் பாதியைக் 'கம்யூட்' செய்து, அப்பெரும் தொகையுடன், 'கிராசுவிடி' பணத்தைச் சேர்த்து, அவசியமானால் வீடு கட்ட நிதியுதவும் கூட்டுறவுச் சங்கத்தின் மூலம் கடன் வாங்கிச் சொந்தத்தில் வீடு கட்டிக்கொள்ள வேண்டும் என்பது மனைவி மக்களின் ஏகமனதான அபிலாஷை. அதற்கு அனுசரணையாக "இவர்களுக்குக் கல்யாணமானால் இந்த வீடு காணாது" என்றாள் தாய்.

"நிஜந்தான்; ஆனால் கல்யாணம் என்றதும் நினைவுக்கு வருகிறது — ரங்கசுவாமி மீனாட்சியின் கல்யாணத்துக்காக அவசரப்படுத்தினால் பணம் தயாராக இருக்க வேண்டாமா? வீட்டு ஆசையை நிறுத்திக்கொள்வோம்" என்றார் தந்தை.

இரண்டாம் மகன் ஹாலாஸ்யம், "இப்பொழுதே இந்த எண்பது ரூபாய் போர்ஷனில் பழைய பத்திரிகைகளுக்குத்தான் இடம் சரியாயிருக்கிறது. இன்னும் ஐந்தாறு வருஷங்களில்

ஒட்டகம் கூடாரத்துக்குள் மெல்ல மெல்ல நகர்ந்து ஒட்டகக்காரனையே வெளியே தள்ளிய கதையாக —'' என்றான்.

அவன் தமையன் ராமஸ்வாமி, '' அப்பா! கோபித்துக் கொள்ளாதீர்கள். உபயோகம் இல்லாத எந்த ஒரு பண்டத்தையும் ஏழாண்டு காப்பாற்றி வைத்தால் உபயோகம் ஏற்படும் என்பார்கள். வெங்கிட்டு மாமா விஷயத்தில் எதிர்பார்த்தபடி அது சங்கடமான உண்மையாயிற்று. தம் மகனையும் தம் தம்பி கோபால் மாமாவின் மகனையும் உத்தேசித்து அவர் அதிக அகலமான 'பெரம்புலேடர்' ஒன்று வாங்கினார். ஆறு வருஷங்கள் அது பரண் மேல் தூங்கிற்று. போன தை மாதம் இரட்டை பிறந்தது!'' என்றார். தாய் ''கேலி செய்யாதே'' என்று கண்டித்தார்.

''ஐந்தாறு ஆண்டுகளாக உள்ள இந்தப் பத்திரிகைகளால் என்ன உபயோகம். 'இந்தியா' பத்திரிகைக் காரியாலயத்தாருக்குத் தெரிந்தால், அவர்களுடைய பழைய அடுக்குகளில் ஏற்பட்ட காலி இடங்களை நிரப்ப நல்ல விலை கொடுத்து வாங்குவார்கள். 10, 20, 25 ரூபாய் என்று பேரம் செய்யலாம். மொத்தத்துக்கும் இல்லையம்மா. அவர்கள் விரும்பும் பிரதிக்கு 400, 500, 1000கூட நமக்குக் கிடைக்கலாம்! அதிர்ஷ்டமிருந்தால் ஒரு பழைய வழக்கு சம்பந்தமாக ஒரு வக்கீல் ஒரு குறிப்பிட்ட பிரதியை நூறு, இருநூறு கொடுத்து வாங்கக் கூடும். 'இந்தியாக்'காரர்களே அதிகப்படி பிரதி இருந்தால் அப்படித்தான் விற்பார்கள் அம்மா. சாதாரணமாகவே நாலு நாட்கள் ஆகிவிட்டால் ஒரு பிரதியின் விலை ஒரு ரூபாய், தெரியுமாம்மா? அப்பா, வீட்டில் இடத்தை அடைத்துக் கொண்டிருக்கும் இந்தப் பத்திரிகைகளால் என்ன உபயோகம் என்று தெரியவில்லை. உங்களுக்கும் கண் படலம் ஆரம்பமாகி வருகிறது. அது முற்றிச் சிகிச்சை ஆகும்வரையில் சில ஆண்டுகளுக்கு ஒன்றும் சரியாகப் படிக்க வராது. படிக்காமல் இருப்பதே நல்லது'' என்று விளக்கமாகவும் நகைச்சுவையுடனும் சொன்னான். ஆனால் நிதானமாக ஆரம்பமான குரல் கடைசியில் படபடவென்று முடிவடைந்தது.

தாய், ''சரியாய்ச் சொன்னாய், ராமு! நீங்களே சொல்லுங்கள். உங்களுக்கு இந்த விஷயத்தில் ஏன் இவ்வளவு பிடிவாதம்? இந்தக் காகிதக் கட்டுக்களால் என்ன உபயோகம்?'' என்றாள்.

கணவர் பொறுமை இழந்து, ''நான் தலையில் சுமந்து கொண்டா போகப் போகிறேன்? மாதக் கடைசியில் பணப்பெட்டி காலியாயிருக்கும் சமயம் பார்த்து நான் செத்து வைத்தால் என்னை எரிப்பதற்கு உதவும். என் மனத்தை இத்தனை காலம் கவர்ந்த கருத்துக்களும் என்னுடன் மேலுலகம் கிளம்பும்'' என்றார்.

''நீங்கள் இப்படிப் பேசுவதானால் நாங்கள் இனி வாய் திறக்கப் போவதில்லை. வெள்ளைக் கிழமையும் அதுவுமாய்...'' என்று சிதைதக்க அபிநயத்துடன் சொல்லக் கூட்டம் கசப்புடன் கலைந்தது.

சௌந்தரேசன் இரு கைகளாலும் தலையைப் பிடித்துக் கொண்டு வீட்டுத் திண்ணையில்






உட்கார்ந்து, ''சீதா! என்னமோ செய்யறது. தீர்த்தம் கொண்டு வா'' என்றார் பதறிய குரலில்.

மனைவி பயந்து கொண்டே தண்ணீர் கொண்டு வந்து கொடுத்தாள். சுவரில் சாய்ந்து உட்கார்ந்திருந்த கணவர் தம் வசமிழந்து ஒரு பக்கமாய்ச் சரிந்துகொண்டே போனார். சீதை அவரைப் பிடித்துப் படுக்க வைத்து, தலையணைகள் கொண்டுவந்து அண்டல் கொடுத்துவிட்டு, அக்கம் பக்கத்தாரிடம் தன் பிள்ளைகளின் ஆபீசுக்கும் பழக்கமான டாக்டருக்கும் டெலிபோன் செய்யும்படி கேட்டுக் கொண்டாள். பிள்ளைகள் வந்து சேருவதற்கு முன்பே ஒரு வார்த்தை கூடப் பேசாமல் சுந்தரேசன் உலகப் பிரச்னைகளிலிருந்து ஓய்வு பெற்று விட்டார்.

முதல் நாள் காரியங்களுக்கு ஐம்பது அறுபது தேவைப்படுமே, பெட்டி காலியாக இருக்கிறதே, பிள்ளைகளின் பாங்குக் கணக்குகளிலும் ஐந்தாறு ரூபாய்தான் மிஞ்சியிருக்கிறது—என்று குடும்பத்தினர் கிசுகிசுவென்று பேசிக்கொண்டனர்.

விஷயம் புரிந்ததும், சீதையின் தமையன், ''அதற்கென்ன சீதை, காரியங்கள் ஆரம்பமாகட்டும். அரை மணி நேரத்தில் நான் பணத்துடன் வருகிறேன்'' என்று சொல்லிப் புறப்பட்டார். சீதை ரோஷத்துடன் அவரை நிறுத்தினாள். காரணம்? ஒவ்வொன்றுக்கும் காரணம் கூற முடியுமா? அதுவும் மன முடைந்த நெருக்கடியில்?

அப்போது புரோகிதர் பத்திரிகைக் கட்டுக்களைக் காட்டி, ''இதென்ன?'' என்றார். ''பல்லாண்டுப் பத்திரிகைகள்'' என்ற விடை கிடைத்ததும், ''இவ்வளவுமா? எதற்காக வைத்திருக்கிறீர்கள்? பழுப்பேறி, நைந்து போய் இடத்தை அடைத்துக் கொண்டு? இவை கட்டாயம் இருந்தாக வேண்டுமா? விற்றுக் காசாக்கலாமே?'' என்று கூறினார்.

''அவர் பிரியப்பட்டு வைத்திருந்தார். இனி உபயோகமில்லை. விற்க வேண்டியதுதான். ஆனால் இந்தக் கெடுபிடியில்...'' என்று சீதை ஆரம்பித்தாள்.

புரோகிதர், ''அதொன்றும் சிரமமில்லை. என் தம்பி மகன் பழைய பேப்பர் டிப்போ நடத்துகிறான். சாவகாசமாக அவன் இவற்றை எடுத்துக் கொண்டு போய் உங்களுக்கு நியாயமான விலை கொடுப்பான். அவன் வாங்கியாகிவிட்டது என்றே நினைத்துக் கொள்ளுங்கள். இதோ நூறு ரூபாய் அட்வான்ஸ்! முந்நூறு, நானூறு வரையில் தேறும் என்று நினைக்கிறேன். என்ன யோசிக்கிறீர்கள்?'' என்றார்.

சீதையை ஒரு யோசனை, ஆத்ம சோதனை வதைக்கத்தான் செய்தது. கணவர் மிகவும் மதித்த பொருளை, பல பூசல்களுக்குக் காரணமாயிருந்த வஸ்துவை, அவர் சடலத்தின்முன் னிலையிலேயே அற்பமான முறையில் வீட்டிலிருந்து வெளியேற்றுவதா? ஆனால் அந்தக் காகிதங்களை அவளால் காப்பாற்ற முடியுமா? எத்தனை காலம் காப்பாற்ற முடியும்? இரண்டு வாரங்களுக்குப் பிறகு பிள்ளைகள் அவற்றை விற்கத்தான் செய்வார்கள். அதை இப்பொழுதே செய்துவிடலாமே!.... ''சரி சாஸ்திரிகளே!'' என்றாள் சீதை, கனவிலிருந்து பேசுபவள் போல், சுவர்ப் பக்கம் திரும்பியவளாய்.

அருகேயிருந்த காகிதக் கட்டுகள் மேல் சாய்ந்து குற்ற உணர்வு குறுகுறுக்கச் சலசலவெனக் கண்ணீர் வடித்து, விம்மி விம்மி அழுதாள். அக்கட்டுக்களிலிருந்து,

என்னை எரிக்க உதவும்
என்னை எரிக்க உதவும்
என்னை எரிக்க உதவும்

என்ற ஆழமான குரல்கள் ஒரு குகைக்குள்ளிருந்து எதிரொலிப்பவை போல், அவள் காதுகளில் முழங்கின.




# சோதனைகள் நிறைந்த காலம்

வாங்க இயலாத அளவு விலைவாசிகள் உயர்ந்துவிட்டன. எதை வாங்க வேண்டுமென்றாலும், ஒரு தடவைக்கு இரண்டு தடவைகள் யோசிக்க வேண்டியிருக்கிறது. முக்கியத் தேவைகளான உணவு, உடை, உறையுள் ஆகியவற்றிற்கு வகை செய்ய வேண்டியிருக்கிறது. ஆயுள் இன்சூரன்சும் அவற்றைப் போலவே மிகவும் முக்கியமானது. உங்கள் மகனின் உயர்கல்வி, மகளின் திருமணம், குடும்பப் பாதுகாப்பு, உங்களது கவலையற்ற ஓய்வுக்காலம் ஆகியவற்றிற்கு வழிவகுக்க ஆயுள் இன் சூரன்சு உதவுகிறது. இடையில் துரதிர்ஷ்டவசமாக உங் களுக்கு ஏதாவது நேர்ந்து நீங்கள் இல்லாதுபோக நேரிட் டாலும்கூட உங்கள் குடும்பத்திற்குத் தகுந்த உதவி கிடைக்கும். விவரங்களுக்கு உங்கள் எல்.ஐ.சி. முக வரையோ அல்லது அருகிலுள்ள எல்.ஐ.சி. அலுவலகத் தையோ அணுகுங்கள்.




**ஆயுள் இன்சூரன்சு போல ஆதரவு தருவது எதுவுமே இல்லை.**

EP-LIC-3-74




தினம் 'மாணவர் — கண்டக்டர் மோதல்' — கல்லூரி அடைப்பு என்ற செய்தியைப் பார்த்துப் பதறித் துடிக்கும் பெற்றோர் 'இப்படி இளம் தலைமுறையினர் சக்தி பாழாகிறதே!' என்று வருந்துகின்றனர். அரசியல் — அநாவசிய ஆர்ப்பாட்டங்களிலிருந்து மாணவ சக்தி மீண்டால் என்னவெல்லாம் சாதனைகள் நிகழும் என்பதைப் பச்சையப்பன் கல்லூரியில் அனைத்துக் கல்லூரி மாணவர்களின் விஞ்ஞானக் கண்காட்சி விளக்கியது.

கண்காட்சியைத் தொடங்கி வைத்தவர் துணைவேந்தர் சுந்தரவடிவேலு. உலக சர்வகலாசாலை சேவைக் கழகம் மாணவர்களுக்கு இந்த விஞ்ஞான விந்தைக் கண்காட்சியை உருவாக்க உதவியதை அவர் வாழ்த்தாமல் விடுவாரா?

விஞ்ஞானக் கண்காட்சியில் கலாசாலை மாணவ மாணவிகள் எறும்பைப் போல் சுறுசுறுப்போடு தங்கள் விஞ்ஞான விந்தைகளை வந்திருந்தவர்களுக்குச் சுட்டிக் காட்டி விளக்கம் தந்தனர். 'தீப்பெட்டியில்லாது தீ', 'நீரில் நர்த்தனமாடும் பாச்சை உருண்டைகள்', 'செயற்கை முறையில் அஸ்தமிக்கும் சூரியன்', 'மின் விசை சைரன்' என்று விஞ்ஞான விந்தைகளின் எண்ணிக்கை பெருகிக் கொண்டே போகிறது! ஓர் அமுல் டப்பாவும் திரிவிளக்கும் மாஜிக் டெலிவிஷனாகிறது! "Cardio spermum halicacabam உங்களுக்குத் தெரியுமா?'' என்று சென்னை வைத்தியக் கல்லூரி மாணவர் கேட்டார்.

நாம் பிரமித்து நிற்பதைப் பார்த்துவிட்டு அவரே, அடுத்த கணம், ''அந்த நீண்ட பெயரைக் கண்டு குழம்பாதீர்கள். முடக்கத்தான் செடியிலிருந்து தயாரித்த ரஸத்தை 'இன்செக்ட்' பண்ணினால் இதயத்தின் துடிப்புக்கள் (heart beat) குறைகிறது என்று சென்னை வைத்தியக் கல்லூரிப் பேராசிரியை லலிதா காமேசுவரன், மாணவர்கள் கோபாலகிருஷ்ணன், தனஞ்செயன் ஆராய்ச்சி செய்து கண்டுபிடித்திருக்கிறார்கள்!'' என்று விளக்கினார். குழந்தையின் சாதாரண பிறப்புக்கும், விநோதப் பிறப்புக்கும் உரிய 'குரோமோஸம்ஸ்' 'ஆட்டோஸம்ஸ்' மாறுதல்களைப் பட விளக்கங்களுடன் சென்னை கால்நடை மருத்துவக் கல்லூரி மாணவர்கள் விளக்கினர்!

■ சென்னை மருத்துவக் கல்லூரி மாணவர் வைத்திருந்த 'தானே எரியும் தெரு விளக்குகள்!'

இந்த விஞ்ஞானக் கண்காட்சி உலக சர்வகலாசாலை சேவைக் கழகத்தின் டைரக்டர் அண்ணாமலையின் உறுதுணையோடு, பச்சையப்பன் கல்லூரி மாணவர்களான டி. ஜே. ஸ்ரீதர், ஜே. சுந்தரராஜன், ஆர். விஜயகுமார், ஜி. திருஞானசம்பந்தம், மாகாணக் கல்லூரி மாணவர்களான சண்முகம், முரளிமோகன் ஆகியோரின் பெரு முயற்சியினால் பச்சையப்பன் கல்லூரியில் டிசம்பர் 7, 8, 9 ஆகிய மூன்று நாட்கள் எந்தவிதப் போராட்டமுமின்றி அமைதியாக நடந்தேறியது. — பி. எஸ். எம்.



(ஸ்தாபிதம்: 1947)

# பாலுஸேரி பெனிபிட் சிட் பண்டு
## பிரைவேட் லிமிடெட்

"வீணு விகார்" — 17-A, ஃபிளாங் ரோடு,
ஷண்முகானந்தா ஹாலுக்கு அருகில்
சயான் (கிழக்கு) பம்பாய்-22. D. D.
டெலிபோன்: 471455
தபால் பெட்டி 6759 :: தந்தி: "GROWRICH"

**அங்கத்தினர்களுக்கு எமது புது வருட வாழ்த்துக்கள்**

ஏலம் கேட்ட பிறகு டிவிடெண்டு அடையும் வசதியுள்ள கீழ்க்கண்ட
**1975 ஜனவரி மாத புதிய குருப்புகள்**

**குறுகிய காலம்**
25 மாதங்கள் 25 அங்கத்தினர்கள்
முதல் ஏலத் தேதி: 12-1-75

| வகுப்பு | மாதச் சந்தா ரூ. | சிட்டுத் தொகை ரூ. |
|---|---|---|
| B | 100/– | 2,500/– |
| C | 50/– | 1,250/– |
| F | 25/– | 625/– |

**நீண்ட காலம்**
40 மாதங்கள்-40 அங்கத்தினர்கள்
முதல் ஏலத் தேதி: 2-2-75

| வகுப்பு | மாதச் சந்தா ரூ. | சிட்டுத் தொகை ரூ. |
|---|---|---|
| LTE | 500/– | 20,000/– |
| LTF | 250/– | 10,000/– |
| முதல் ஏலத் தேதி 19-1-75 | | |
| LTG | 125/– | 5,000/– |
| LTM | 50/– | 2,000/– |

நேரம்: காலை 8 மணி முதல் 10-30 வரை; மாலை 4 மணி முதல் 7-30 வரை
வார விடுமுறை: திங்கட்கிழமை

அலுவலகத்துக்கு 1975 ஜனவரி 26ந் தேதி குடியரசு விடுமுறை தினமாகையால் அன்று நடக்க வேண்டிய கடைசி ஞாயிற்றுக்கிழமை ஏலச் சீட்டுகள் 1975 பிப்ரவரி 2ந் தேதி நடைபெறும்

தலைமை அலுவலகம் & பதிவு செய்யப்பட்ட அலுவலகம்
**திருவல்லிக்கேணி, சென்னை-600005**
**கிளைகள்: பெங்களூர் – கல்கத்தா – புது டெல்லி – கோயம்புத்தூர்**

இலவசப் பிரசுரத்திற்கு எழுதுங்கள்
சீட்டுகள் ஒதுக்குதல் கம்பெனியின்
உரிமையைப் பொறுத்தது




எங்கள் சேவை உங்களுக்குத்தேவை

# ஒற்றர் ஜாக்கிரதை — சென்ற இதழ் தொடர்ச்சி


















# ஒற்றர் ஜாக்கிரதை 7

தொகுப்பு: நாடோடி சித்திரம்: ராஜு



















அன்றிரவு...
சபாஷ் பீட்டர்! முதல் சாவியே திறந்து விட்டது!


வீட்டுக்குள் காம்பெல்லின் காரியாலய அறையை அடைந்து மேஜை மீதும் அதன் டிராயர்களிலும் எதையும் கலைக்காமல் தேடியதில்...
SXK
ஆ! இதோ இருக்கிறது SXK !


பாக்கெட்டிலிருந்து சிறிய காமிராவை எடுத்து ஒவ்வொரு பக்கமாகப் படமெடுத்துக் கொண்டான் பிம்பி.
..பிளாஷ்


மறுநாள் காலை ராணுவ அதிகாரி காம்பெல் பிரிட்டிஷ் ஒற்றர் தலைவரை சந்தித்து....
நீங்கள் சந்தேகித்தது சரிதான். பிம்பி ஒற்றன்தான்.


நீங்கள், 'அவனைக் கவனி ஆனால் பிடிக்காதே' என்றதால் சும்மா விட்டேன். SXK ஃபைலைப் போட்டோ எடுத்திருக்கிறான். சீக்கிரம்! அது ருஷ்யரிடம் கைமாறு முன் பிம்பியைக் கைது செய்யுங்கள்!


அதற்கு அவசியமே இல்லை. உங்களிடம் தரப்பட்ட SXK ஃபைல் உண்மையானது அல்ல. ருஷ்யர்கள் மெய்யெனக் கருத வேண்டிய தவறான தகவல்களே அதில் இருந்தன! இனி நீங்கள் தைரியமாக அசல் SXK ஃபைலைப் பார்வையிட எடுத்துப் போகலாம்!

முற்றும்.

# உங்கள் மகன் லட்சாதிபதியாக வேண்டுமா? இன்றே ரூ. 13,700 முதலீடு செய்யுங்கள்.

maa/CBL-185 TAM



நீங்கள், உங்கள் குழந்தைகளின் மேல் படிப்பு, உங்கள் மகளின் திருமணம் போன்ற குறிப்பிட்ட நோக்கத்துடன் சேமிக்க வேண்டுகிறீர்களா?

அதற்குச் சிறந்த வழி; உங்கள் குழந்தைகளின் பெயரில் கார்பொரேஷன் பாங்கின் ''பாலநிதி ரொக்க பத்திரங்களில்'' இப்பொழுதே முதலீடு செய்யுங்கள்.

இந்தப் பத்திரங்கள் கவர்ச்சியுள்ள வட்டியோடு சிறு தொகைகளிலும் கிடைக்கின்றன.

வருமானவரி விதி விலக்குள்ளவை. இத்திட்டத்தின் சிறப்பு அம்சம்:

சேமிப்பை வேண்டும்போது சிறு தொகைகளாகவும் பெற்றுக்கொள்ளலாம்.

இன்று ரூ. 1000க்கு முதலீடு செய்யப்பட்ட தொகை 10 ஆண்டுகளில் ரூ. 2707 ஆக வளர்ந்து விடுகிறது. இருபது ஆண்டுகளில் ரூ. 7328 ஆக பெருகுகிறது.

எங்கள் வங்கிக்கு வருகை தாருங்கள். எங்கள் உதவியை நீங்களே போற்றுவீர்கள்!

## பாலநிதி ரொக்க பத்திரங்கள்

*கர்நாடகம், கேரளம், ஆந்திரம், தமிழ்நாடு, குஜராத், மஹாராஷ்டிரம், வங்காளம், டில்லி, கோவா மாநிலங்களில் 150க்கு மேற்பட்ட கிளைகள்.*

—சிநேக மனப்பான்மையுடன் விளங்கும் வங்கி

## கார்பொரேஷன் பாங்க் லிமிடெட்



ESTD. 1906

பதிவு அலுவலகம்: உடுப்பி

நிர்வாக அலுவலகம்: மங்களூர்

# தங்கமான சங்கத்தின் பொன்னான பணிகள்




**எஸ். சுப்பிரமணியம்**

அருகே இருக்கும் ஆமதாபாத்தானாலும் சரி, தொலைதூரத்தில் இருக்கும் அமெரிக்காவானாலும் சரி. தமிழர்கள் அங்கே குடியேறிவிட்டால் தங்கள் கலாசாரத்தையும் குடியேற்றிவிடுவார்கள்! நாலு தமிழர்கள் சேர்ந்துவிட்டால் ஒரு தமிழ்ச் சங்கம் உருவாகிவிடும். தமிழகக் கலைகளைப் பயிலவும் பார்க்கவும் கேட்கவும் வசதி செய்துகொண்டு விடுவார்கள்!

இதனால் குடியேறுகிற பிராந்தியத்தில் உள்ள மக்களுடன் தமிழர்களுக்குப் பழகத் தெரியாது என்ற அபவாதத்துக்குக்கூட சில சமயம் ஆளாகிறார்கள். ஆனால் இதைவிடத் தவறான வியாக்கியானம் ஒன்று இருக்க முடியாது.

குடியேறிய இடத்தின் மக்களுடைய கலாசாரங்களை உணர்ந்து அனுபவித்தாலும் அதிலேயே மூழ்கிவிடாமல் தமிழகத்தின் கலைகளைப் போற்றி வருவது தமிழன் பண்பு. தமிழரின் தொன்மையான நாகரிகத்தைப் பிற பிரதேச மக்கள் புரிந்து கொள்ளவும் உதவுவதாகிறது. தமிழனின் இந்தப் போக்கு விசால மனப்பான்மை காரணமாக எழுந்ததேயன்றிக் குறுகிய நோக்கில் அல்ல.

இல்லாத போனால் கல்கத்தாவில் தென்னிந்திய கிளப் என்பதாக ஒரு நிறுவனம் உருவாக மாமேதைகளான ஸர் ஸி. வி. ராமன், டாக்டர் ராதாகிருஷ்ணன் போன்றவர்கள் ஊக்கமளித்திருப்பார்களா?

கிட்டத்தட்ட ஒரு பொன் விழா காலத்துக்குக் கல்கத்தாவில் கலாசாரப் பணி புரிந்து வந்துள்ள தென் இந்திய கிளப், ஹரிகதைகள், விவாத அரங்குகள், நாடகம், சங்கீதம் போன்றவற்றுக்கு ஆதரவு தந்து வந்திருக்கிறது. சங்கத்தின் இயல்பான வளர்ச்சியுடன் அதன் பணிகளும் பல்வேறு துறைகளில் கிளைவிட்டுப் படர்ந்துள்ளன. சமூகப் பணி என்ற முறையிலே சிறு மருத்துவமனை, குழந்தைகள் காப்பகம், மாணவர் சங்கம், உணவு விடுதி, வாசக சாலை எல்லாம் உருவாகியுள்ளன.

தென் இந்திய கிளப்பின் பெண் அங்கத்தினர்கள், மாதர்களுக்குப் பயன்படத்தக்க துறைகளில் கவனம் செலுத்தி உணவுக் கலை, தையல் கலை, பல்வேறு மொழிகள் முதலியன பயில வசதி செய்து தருகிறார்கள். பஜன் வகுப்புக்களும் உண்டு.

பொன்விழா ஆண்டு நெருங்குவதை முன்னிட்டுத் தென் இந்திய கிளப் பல புதிய சாதனைகளைப் புரியவும் ஏற்கனவே செய்து வரும் நற்பணிகளை இன்னும் நலம் பயக்கும் முறையில் தொடரவும் திட்டமிட்டிருக்கிறது. இந்தத் திட்டங்களுக்கு உதவும் முகமாக ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி ஓர் உதவிக் கச்சேரி அளிக்க முன்வந்திருக்கிறார். இம் மாதம் 20ந் தேதி கல்கத்தா கலாமந்திர் அரங்கில் கச்சேரி நடக்கிறது.

இந்த அரிய வாய்ப்பினை நல்லபடியாகப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும் என்ற உறுதியுடன் இருக்கும் தென் இந்திய கிளப், கல்கத்தாவாசிகள் அனைவரது ஒத்துழைப்பையும் கோருகிறது.

நற்பணிகள் நிறைவேற எந்த நல்லிதயம் தான் ஒத்துழைக்காது!





## இவர்கள் 'அம்பயர்' ஆனால்....?

ம. பொ. சி: "அப்பாடா! கடைசியில் இந்தப் பதவியாவது கிடைத்ததே!"

வேலப்பன்: "நடுவராகவா? சேச்சே. நடுவராக இருந்தால் கட்சி மாறமுடியாதே. நமக்கு இந்த வேலை ஒத்து வராது!"

கருணாநிதி: "போஸ்டரில் இனி டாக்டர் கலைஞர் அம்பயர் முதல்வர் கருணாநிதி என்று போடுவார்களா?"

கல்யாணசுந்தரம்: "முதலாளித்துவ நாடுகளின் ஆட்டத்துக்கு நடுவராக இருப்பதா? நடக்காது!"

எம். ஜி. ஆர்: "பந்தயத்துக்கு வசூலான பணத்துக்கு கணக்குக் காட்டினால்தான் நான் வருவேன்!"

சிவாஜி: "பெரியவரைக் கேட்டுச் சொல்கிறேன்!"

ஹாண்டே: "ராஜாஜியே இறப்பதற்குமுன் என்னிடம் இதைச் சொன்னார். அவரது ஆசையை நிறைவேற்றவே ஒப்புக்கொள்கிறேன்!" -சம்பத்குமார்





# ஒன்பது நாள் விழாவாம்; ஓடுங்கள்! ஓடுங்கள்!

சென்னையில் சென்ற மாதம் பாரதிக்கு ஒன்பது நாள் விழா நடந்தது.

கடற்கரையில் சீர்காழி கோவிந்தராஜன் பாரதி பாடல்களைப் பாடி மகிழ்வித்தது இருக்கட்டும். ஏணியில் ஏறிப் பாரதி சிலைக்கு மாலை



போட்டுவிட்டு, ''பாரதி வாழ்க!'' என்று முழங்கினாரே அதைச் சொல்லுங்கள்! என்ன கம்பீரம்! பாரதிச் சிலையைத் தொட்டதுமே, அவரைப் போலவே சிங்கநாதம் கிளம்பியது போலும்!

■ விழா என்றால் இப்படியா! ஏழு பட்டி மன்றங்களைப் போட்டுத் திணறடித்து விட்டார்களே! பட்டிமண்டபப் புலிகளான திரு கி. வா. ஜ., தவத்திரு அடிகளார், திரு ம. பொ. சி..... இப்படி ஒரே இலக்கிய ஸ்டார்கள் மயம்தான். இந்த மூன்று பட்டிமண்டபங்களும் வெகு ஜோர். இறுதி நாளில் நடைபெற்ற (திரு ஔவை நடராஜன் நடுவர்) காதலா? வீரமா? பட்டிமண்டபம் பட்ட பாட்டைப் பார்த்தால், இனிமேல் யாருமே



பட்டிமண்டபம் நடத்தமாட்டார்கள். சட்டசபை போல் பட்டிமண்டபவாதிகளே (வாதிடுவோர்) வெளி நடப்பு செய்ததென்ன! கட்சி மாறிய காட்சி என்ன! நல்ல வேடிக்கை போங்கள். அமைப்பாளர்கள் பாடு ரொம்பக் கஷ்டம்தான். பேச்சாளர்கள் பொறுப்பில்லாமல் நடந்து கொண்டால், போதுமையா, பட்டிமண்டபத்துக்கு ஒரு கும்பிடு என்று போய் விடுவார்கள், பொதுமக்கள்.

■ கவிதைகள் மாறி வரும் மனித நாகரீகத்தைப் படம் பிடித்துக் காட்டுபவை. கவிதை ரசனை நமக்கு வேண்டும்தான். ஆனால் கவியரங்கம் என்று போட்டுவிட்டுக் கூட்டம் வரும் வரை எதற்காக மணிக்கணக்கில் காத்திருக்க வேண்டும்? கவியரங்குக்காவது கூட்டம் வருவதாவது! கவியரங்கங்கள் இல்லாமல் விழா நிகழ்ச்சிகளை அமைத்தால், ''பிரளயம்'' வந்துவிடுமா என்ன? கூட்டம் வராதபோது கவிதையைப் பழி வாங்க வேண்டுமா?

■ ஜெயந்தி சிறுவர் பள்ளி நடத்திய குழந்தைகள் நிகழ்ச்சி நன்றாக இருந்தது. பல பெரியவர்களின் அறுவைக்குக் குழந்தைகளின் பாஞ்சாலி சபத நாடகம்தான் மருந்தாயிருந்தது.

■ மொத்தம் ஒன்பது நாட்கள் விழாவில் பேசியவர்கள் 120 பேர்! பெருமைப்பட



வேண்டிய சமாசாரம்தான். ஆனால் பேசும் திறமை சிறிதும் இல்லாத விஷயம் தெரியாத பலரைப் பட்டியலில் சேர்த்தது ஏனோ? புது முகங்களை ஆதரிக்கும் நோக்கம் போலும்! பாரதியைத் தேசியச் சிமிழில் அடைத்தார் ஒருவர். மற்றொருவர் வேதாந்தச் சிமிழில் அடைத்தார். சிமிழிக்குள் அடக்காதீர் என்றார் இன்னொருவர். சொற்பொழிவுகளையெல்லாம் கேட்க முடிந்திருந்தால் பாரதியின் முகம் கோபத்தில் குங்குமச் சிமிழாய்ச் சிவந்திருக்கும்!



■ சர்வ கட்சிகளைச் சேர்ந்தவர்களையும், பல துறைப் பெரியவர்களையும் ஒரே மேடையில் கூட்டிப் பாரதி புகழ் பேச வைத்த பெருமை பாரதி இளைஞர் சங்கத்துக்கு உண்டு.

வாழ்த்துகிறோம். — 'பிரம்மபுரிப் பாவை'

வாழ்க்கையில் சந்தோஷமளிக்கும் பல தருணங்கள் ஏற்படுகின்றன

# தலைவலி உங்கள் சந்தோஷத்தை கெடுக்க விடாதீர்கள்

# 2 ஆஸ்ப்ரோ சாப்பிடுங்கள்







மைக்ரோபைன் ஆஸ்ப்ரோ வலியை அதிவேகமாக வெளியே இழுத்து விடுகிறது

A.G.63.TM




## 28. திருடனைக் கொட்டிய தேள்

**ம**த்தியானம் இரண்டு மணிக்குக் கருணாகரன், கஜேந்திரா மில்லின் அதிபரைப் பார்க்கச் சென்று கொண்டிருந்தார். மில் தொழிலாளர்களின் கோரிக்கையைப் பற்றிக் கடைசி முறையாகப் பேச்சு நடத்த முடிவு செய்திருந்தார். இரகசியமாகப் பேச நினைத்ததால் தம்மோடு வேறு யாரையும் அழைத்துச் செல்லவில்லை. கருணாகரனின் பேச்சின் மூலமாக என்னமுடிவு எடுக்கப்படுகிறதோ, அதை ஏற்க மில் தொழிலாளர்கள் தயாராயிருந்தனர். மில் தொழிலாளர்களுக்கு வேலைநிறுத்தம் செய்வதில் விருப்பம் இல்லை. இருந்தாலும், தலைவர் கருணாகரனின் தூண்டுதலுக்கும், புரட்சிக் கட்சி ரௌடிகளின் பயமுறுத்தலுக்கும் பயந்து கிளர்ச்சி செய்ய முனைந்தனர்.

கஜேந்திரா மில்லில் தொழிலாளர்களுக்கு நல்ல ஊதியம் கொடுக்கப்பட்டு வந்தது. கருணாகரனுக்கு நன்கு தெரியும். ராகவனுக்கும் தொழிலாளர்களுக்குமிடையே நிலவி வந்த சுமுகமான உறவை முறிக்க வேண்டும் என்று திட்டமிட்டார். இரண்டு மூன்று முறை கருணாகரனை ராகவன் அலட்சியப் படுத்திவிடவே அவரைப் பழி வாங்க முடிவு செய்திருந்தார். கஜேந்திரா மில்லின் தொழிலாளர்களைத் தூண்டிவிட முனைந்தபோது முதலில் எதிர்ப்பு இருந்தது. திருப்தியோடு இருந்த தொழிலாளர்கள், ராகவனுக்கு எதிராகக் கிளர்ச்சி செய்யத் தயங்கினர். கஜேந்திரா மில்லின் லாபம் மிக அதிகம் என்றும், அதை ஒப்பிடும்போது தொழிலாளர்களுக்குக் கொடுக்கப்பட்டு வந்த ஊதியமும் போனஸும் மிகக் குறைவு என்றும் கருணாகரன் அடிக்கடி சொல்லவே, தொழிலாளர்களின் மனம் மாறியது.

தொழிலாளர்களைத் தம்முடைய பாதையில் திருப்புவதுதான் தலைவர்களுக்கு முதலில் சங்கடமான வேலை. ஒருமுறை பாட்டாளிகளைத் திருப்பி விட்டால் பிறகு, அவர்களைத் தங்கள் போக்கில் இட்டுச் செல்வதில் தலைவர்களுக்கு எவ்விதச் சங்கடமும் இல்லை. இந்தத் தந்திரத்தில் புரட்சிக் கட்சி கருணாகரனுக்கு மிகுந்த தேர்ச்சி உண்டு. வேலைநிறுத்தம் செய்யும் காலங்களில் தொழிலாளர்களின் குடும்பங்கள் வறுமையால் பட்டினி கிடக்கும் நிலைமை அடிக்கடி ஏற்படுவதுண்டு. அந்தச் சமயங்களில் தொழிலாளர்களின் மனைவிமாரும் குழந்தைகளும் வடிக்கும் கண்ணீரைப் பற்றி மார்க்ஸியவாதம் பேசும் தலைவர்களுக்கு அக்கறை இல்லை. கொள்கைக்காக இரத்தம் சிந்துவதாகக் கோஷமிடுவார்கள். சிந்தப்படுவது பட்டினியால் வாடும் பாட்டாளிகள் இரத்தம்தான்.

ராகவனைப் பழி வாங்க வேண்டும்; அந்த முயற்சியில் தமக்கு ஏதாவது லாபம் கிடைத்தே ஆக வேண்டும் என்பதுதான் இப்போது கருணாகரனின் திட்டம். இந்த முறை ஐம்பதினாயிரம் ரூபாயாவது கிடைக்க வேண்டும் என்று கணக்கிட்டார். பெறுவோம் என்ற நம்பிக்கையும் இருந்தது.

**ரா**கவனின் வீட்டை அடைந்ததும் கருணாகரனை முதலில் வரவேற்றவள், நளினிதான்.

''அப்பா மாடியில் இருக்கிறார்'' என்றாள்.

''நீ ஏன் இன்று கோர்ட்டுக்கு வரவில்லை? பாவம் சம்பத், தனியே கேஸை நடத்துகிறான்'' என்றார் கருணாகரன்.

''எனக்குக் கோர்ட்டுக்கு வரவே பிடிக்கவில்லை.''

''ஐயோ.... ஏன் அப்படி ?''

''அப்படித்தான்.... இனி கோர்ட்டுக்கு வரப் போவதில்லை.''

''தீர்மானித்துவிட்டாயா ?''

'' ஓ...........''

'' உனக்குக் கோர்ட்டுக்கு வந்துதான் சம்பாதிக்க வேண்டும் என்பதில்லை.''

''உங்களுக்கு மட்டும் என்னவாம்?''

''என்னுடைய பிழைப்பே அதுதானே ?''

''ஏன்? புரட்சிக் கட்சி என்னவாயிற்று ?''

''ஓஹோ.... கட்சி சோறு போடுமா?''

''இன்றைய அரசியல் மாதிரி சம்பாத்தியம் பண்ணக்கூடிய இலகுவான தொழில் வேறு என்ன இருக்கிறது?''

கருணாகரன் சிரித்துக் கொண்டே மாடிக்குச் சென்று விட்டார். மாடியில் ராகவன் அவரை வரவேற்றுச் சோபாவில் அமரச் செய்தார்.

பணியாள், கண்ணாடித் தம்ளரில் பழரசம் கொண்டு வந்து கருணாகரனிடம் நீட்டினான். தம்ளரை வாங்கி உறிஞ்சத் தொடங்கிய கருணாகரன், ''என்ன முடிவு செய்தீர்கள்?'' என்று கேட்டார்.

''ஏற்கெனவே நல்ல ஊதியம் கொடுத்து வருகிறேன். இதைவிட இன்னும் எதிர்பார்ப்பது நல்லதில்லை.''

''மில் நல்ல நிலையில் ஓடும்போது, ஊதிய உயர்வு கோருவது தவறில்லையே ?''

''ஊதியத்தை எவ்வளவுதான் உயர்த்த முடியும்? ஒரு தொழிலாளியின் வேலைக்

குத் தகுந்த ஊதியம்தானே கொடுக்க முடியும்?''

''தொழில் கூடங்களில் லாபம் அதிகம் வரும்போது ஊதியத்தையும் உயர்த்த வேண்டியதுதானே ?''

''இது பேராசை !''

''செய்யும் தொழிலுக்கு ஊதியம் கேட்பதா பேராசை ?''

''அதிகமாக ஊதியம் கேட்பது வேறு என்ன? ஒரு தொழிலாளி, தான் செய்யும் வேலைக்குத் தகுந்த ஊதியத்தை எதிர்பார்ப்பதுதான் நியாயம்.''

''உங்கள் லாபம் அதிகரிக்கும்போது....?''

''லாபம் அதிகரிக்கும் போதெல்லாம் ஊதியம் உயர வேண்டும் என்றால், அது நியாயமாகாது. லாபத்தில் பங்கு என்றாகி விடும்.''

''பங்குதான் கேட்கிறோம்.''

''முதல் என்ன போட்டீர்கள் ?''

''எங்களுடைய உழைப்புத்தான். பாட்டாளி இல்லையென்றால் உங்கள் மில் ஏது ?''

''மறு பக்கத்தை மறந்து விட்டீர்களே ! நான் இல்லையென்றால் கஜேந்திரா மில் ஏது? தொழில் துறை என்பது ஓர் இரட்டைக் காளை வண்டி. தொழிலதிபரும், தொழிலாளிகளும்தான் காளைகள். இருவரும் இணைந்து செயலாற்றினால்தான் வண்டி சீராகப் போகும். இந்த அடிப்படை விஷயத்தை உங்கள் கட்சி உணர மறுப்பதுதான் வேடிக்கை.''

''பாட்டாளியின் இரத்தத்தை உறிஞ்சினால்......''

''இது வீண் பேச்சு, மிஸ்டர் கருணாகரன்! ஒவ்வொரு தொழிலாளியும் தான் செய்யும் வேலைக்குத் தகுந்த ஊதியத்தைவிட அதிகமாகக் கேட்பது பேராசைதான். லாபத்தை மட்டுமே கருத்தில் கொண்டு ஊதியம் அளிப்பதாக இருந்தால், சில தொழிற்கூடங்கள், ஒரு காவலாளிக்கு மட்டுமே ஐந்நூறு ரூபாய் கொடுக்க வேண்டியிருக்கும். இது பெரிய தவறு.''

''ஏன்? காவலாளி ஐந்நூறு ரூபாய் சம்பளம் வாங்குவது தவறு ?''

''அவனைவிடப் படித்தவன், தேர்ச்சியுள்ளவன் தாலுக்கா குமாஸ்தாவாக வேலை பார்த்தால் அவனுக்குச் சம்பளம் இருநூறு வரைதானே கிடைக்கிறது? தனக்கு மட்டும் சம்பள உயர்வு வேண்டும் என்று தொழிலாளி மட்டும் எண்ணுவது பேராசை இல்லாமல் வேறென்ன? ஒரு தொழிற்கூடத்தில் லாபம் அதிகம் இருக்கிறதென்றால், லாபத்தை முழுவதையும் தொழிலாளிகளுக்கு ஊதியமாகவும் போனஸாகவும் கொடுத்துவிட வேண்டும் என்று கேட்பதில் நியாயமே இல்லை. ஒரு வேளைச் சாப்பாடுகூட இல்லாமல் வேலை இன்றித் தவிக்கும் குடும்பங்கள் எத்தனையோ உண்டு. அந்தமாதிரி குடும்பங்களுக்கு உதவுவதற்காகத்தான் அரசு லாபத்தின் கணிசமான பகுதியை வரியாக வசூலித்துக் கொண்டு போகிறது'' என்றார் ராகவன்.

கருணாகரன் பதில் கூற முடியாமல் விழித்தார். தம்ளரில் இருந்த பானம் முழுவதையும் குடித்துவிட்டுத் தம்ளரை மேஜையின் மீது வைத்தார்.

'' செய்கிற காரியத்துக்குச் சம்பந்தமில்லாமல் அபரிமிதமான ஊதிய உயர்வையும் சலுகைகளையும் பெறும் சாரார்கள் இந்நாட்டில் இருக்கிறார்கள். அவர்களைப் பார்த்து ஏறத்தாழ அதே போன்ற வேலைகளைச் செய்யும் மற்றவர்கள் பொறுமைப்பட்டுப் புழுங்குகிறார்கள். உங்களுடைய சோஷலிஸ சம நீதி இது பற்றி ஏன் சிந்திக்கவில்லை?'' என்று ராகவன் கேட்டார்.

''மிஸ்டர் ராகவன்! இப்போது இந்தப் பேச்சு எதற்கு? நமக்குள் இப்போது அரசியல் வேண்டாம். நம்முடைய காரியத்தைப்



பார்ப்போம். உங்களுடைய முடிவைச் சொல் லுங்கள்'' என்றார் கருணாகரன்.

''அப்போதே சொல்லி விட்டேனே!'' என்றார், ராகவன் அலுப்புடன்.

''மிஸ்டர் ராகவன்! நான் இப்போது வந்திருப்பது உங்களிடம் சுமுகமான முறையில் பேசி முடிவு காணத்தான். என்னோடு வேறு யாரையாவது அழைத்து வந்தால் பேச்சு வெற்றியடையாமல் போகலாம் என்பதனால் தான் நான் தனியே வந்திருக்கிறேன்.''

''நானும் சுமுகமாக இந்தப் பிரச்னையைத் தீர்க்கத்தான் ஆசைப்படுகிறேன் சமீப காலமாக உங்கள் தலையீட்டால் தொழிலாளர்களின் வேலைத் திறன் குறைந்து மில் நஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிறது. எனவே இப்போதைய நிலையில் எந்தக் கோரிக்கையையும் என்னால் ஏற்க இயலாது. தொழிலாளர்களின் ஒத்துழைப்பை மீண்டும் பெற்றுத் தாருங்கள். மில் லாபத்தில் நடக்கச் செய்யுங்கள். பிறகு உங்கள் கோரிக்கையைக் கவனிக்கிறேன்.''

'' நன்றாகச் சிந்தியுங்கள். வேலைநிறுத்தம் செய்தால் உங்களுக்கு மேலும் நஷ்டந்தானே ?''

'' சந்தேகமில்லாமல்..... அதற்காக ?''

''மேலும் நஷ்டம் அடைவதிலிருந்து தப்ப ஓரளவு நீங்கள் விட்டுக் கொடுக்கலாமே?''

'' விட்டுக் கொடுப்பதற்கே வழி இல்லை. ஏற்கனவே நஷ்டம். இதில் எதை விட்டுக் கொடுப்பது ?''

''சரி, கடைசியாக நான் ஒரு முடிவு சொல்லட்டுமா ?'' என்று கேட்டார் கருணாகரன்.

ராகவன் அவரை உற்றுப் பார்த்தார். கருணாகரன் சொன்னார்: ''தொழிலாளர் நலனுக்காக இரண்டு லட்ச ரூபாய் கொடுங்கள்.''

இதைக் கேட்டதும் ராகவன் திகைத்தார். வேறு எதையோ கருணாகரன் கேட்கப் போகிறார் என்று பயந்த ராகவன் வெறும் பணத்தை மட்டும் கருணாகரன் கேட்டதை எண்ணி வியந்தார்.

இரண்டு லட்சம் என்பது அவருக்கு மிகச் சொற்பமான தொகையே. தொழிலாளர்கள் கேட்கும் சம்பள உயர்வுக்கும், போனஸுக்கும் சம்மதித்தால், ஒவ்வோர் ஆண்டும் சராசரி இரண்டு லட்சத்துக்கு மேல் கொடுக்க வேண்டியிருக்கும். இப்போது கருணாகரன் கேட்பது மொத்தமே இரண்டு லட்சந்தான்... இதில் சதி ஏதும் இருக்குமோ....?

ராகவன் குழம்பினார். இருந்தாலும் பேரம் பண்ணத் தொடங்கினார்.

''அடேயப்பா ! அவ்வளவுக்கு நான் எங்கே போவேன்? அவ்வளவு தொகை இருந்தால் ஒரு புது மிஷின் வாங்கிவிடுவேனே !'' என்றார்.

''இரண்டுலட்சம் பெரியதொகை இல்லை.''

''இப்போதைக்கு என்னால் அவ்வளவு தர முடியாது.''

''இதற்குக்கூட நீங்கள் சம்மதிக்காவிட்டால், பிறகு நான் எப்படித் தொழிலாளர்களைச் சமாதானப்படுத்துவது? முன்பு ஒரு முறை புரட்சிக் கட்சிக்காக நன்கொடை கேட்டு வந்தேன். மறுத்துவிட்டீர்கள். அதனால் தொழிலாளர்களுக்கு உங்கள் மீது கோபம்.''

'' உங்கள் கட்சிக்கு வேண்டுமானால் ஒரு தொகையைத் தந்து விடுகிறேன்.''

'' சரி, அதையாவது எவ்வளவு என்று சொல்லுங்கள்'' என்று கேட்டுவிட்டு ஆவலுடன் ராகவனைப் பார்த்தார் கருணாகரன்.

அவருடைய பேரத்தின் போக்கைப் புரிந்து கொண்டார் ராகவன். இனி ராகவனுக்குக் கவலை இல்லை. முகத்தில் மலர்ச்சி தோன்றியது. உற்சாகம் அடைந்தார்.

''உங்கள் கட்சிக்குப் பணம் கொடுத்துவிடுகிறேன். மில்லை மீண்டும் சுமுகமாக நடைபெற வைப்பது உங்கள் பொறுப்பு'' என்றார்.

''அதற்கு நான் பொறுப்பு ஏற்றுக் கொள்கிறேன்..... கட்சிக்கு எவ்வளவு கொடுப்பீர்கள் ?''

''மிஸ்டர் கருணாகரன்! இப்போது நான் கஷ்டத்தில் இருக்கிறேன். எவ்வளவு கொடுத்தாலும் எனக்குச் சங்கடம்தான். ஆனால் என்னுடைய மில் சுமுகமாக நடைபெறவேண்டும் என்பதற்காக மேலும் நான் நஷ்டத்தை ஏற்கத் தயாராக இருக்கிறேன்.... ஐம்பதினாயிரம் கொடுத்து விடுகிறேன் '' என்றார் ராகவன்.



'' ரொம்பக் குறைத்து விட்டீர்கள். ஒரு லட்சம் கொடுத்துவிடுங்கள்'' என்றார் கருணாகரன்.

ராகவன் யோசித்தார். ''என்னால் அவ்வளவு கொடுக்க முடியாது. எழுபத்தையாயிரம் வைத்துக் கொள்ளுங்கள். அதற்குமேல் என்னால் தாங்க முடியாது'' என்றார்.

''அப்படியானால், நீங்கள் ரசீது கேட்கக் கூடாது '' என்றார் கருணாகரன்.

ராகவன் மனத்துக்குள் சிரித்துக் கொண்டார். ''ரசீது வேண்டாம்'' என்றார். பிறகு சொன்னார் :

''இத்தனை நாட்களாக நான் யோக்கியப் பொறுப்புடன் கணக்கு வைத்துக் கொண்டிருந்தேன். இப்போது உங்களுக்குத் தருவதற்காக நான் கணக்கில் வராத கறுப்புப் பணம் தேடியாக வேண்டும். நேர்மையுடன்

நடந்து கொள்ள வேண்டும் என்று ஆசைப்படு றெவனைக்கூடக் கறுப்புப் பணப் பொருளா தாரம் கவிழ்த்துவிடுகிறது!''

கருணாகரன் சிரித்தார். ''ஆல் இந்தி கேம்! நான் வரட்டுமா ?''

ராகவனின் வீட்டிலிருந்து கருணாகரன் வெளியேறித் தமது வீட்டை அடைந்தபோது திகைத்தார். வாசலைத் தாண்டி வீட்டுக்குள் நுழைந்த உடனேயே அந்த வெளிநாட்டுப் பௌடரின் நெடி வீசியது. இரு முறை தும்மினார். பரபரப்புடன் வீட்டுக்குள் நுழைந்து எல்லா அறைகளையும் பார்த்தார். மதுரம் எந்த அறையிலும் இல்லை. அடுக் களைக்கு வந்தார். சமையல்காரி கமலம், ஏதோ வேலையில் ஈடுபட்டிருந்தாள்.

''அம்மா எங்கே ?'' என்று கருணாகரன் கேட்டார்.

'' உங்கள் சின்ன வக்கீலும், அம்மாவும் டாக்ஸியில் எங்கோ போயிருக்கிறார்கள் '' என்றாள் கமலம்.

''யார் ? சிங்காரமா ?''

கமலம் தலையை அசைத்தாள். கருணாகரன் பற்களைக் கடித்தார். படுக்கை அறைக்கு விரைந்தார். வெளிநாட்டுப் பௌடரின் நெடி, அங்கும் வீசியது. கோபத்தோடு கையிலிருந்த பணப் பையை மேஜையின் மீது வீசினார். அந்த வேகத்தில் மேஜையின் மீதி ருந்த ஒரு கடிதம் கீழே விழுந்தது. பரபரப் புடன் பாய்ந்து எடுத்தார். மதுரம்தான் எழுதி யிருந்தாள்:

'என்னைத் தேட வேண்டாம். தேடினாலும் நான் திரும்பி வரப் போவதில்லை. நான் விவாகரத்து செய்துவிட்டேன். தேவை யானால், சட்ட ரீதியில், நீதிமன்றம் மூலமாக ஊர்ஜிதம் செய்து கொள்ளலாம். என் னுடைய வாழ்க்கையைப் புதுப்பித்துக் கொள்ள முடிவு செய்துவிட்டேன். இனி, வேறு எந்தப் பெண்ணின் வாழ்வையும் திருட வேண்டாம். -மதுரம்.'

கடிதத்தைப் படித்ததும் கருணாகரன் அதிர்ந்துவிட்டார். கோபத்தினால் முகம் சிவந்தது. பற்கள் கடிபட்டன. ''காலிப் பயல்....திருட்டுப் பயல்....'' என்ற வார்த் தைகள் அவர் வாயிலிருந்து தெறித்தன.

கையில் கடிதத்தைப் பிடித்தபடி மேஜை யின் மீது கிடந்த எழுபத்தையாயிரம் ரூபாய் நிரம்பிய தோல் பையை வெறிக்கப் பார்த்த வாறு சிலையாக நின்றார். காலில் ஏதோ உணர்வு தோன்றவே திடுக்கிட்டுக் குனிந் தார். அவருடைய அல்சேஷன் நாய், அவ ருடைய காலை நக்கிக் கொண்டிருந்தது. மிகுந்த கோபத்துடன் நாயை உதைத்தார். அது வலியினால் 'வாள் வாள்' என்று கதறிக் கொண்டு ஓடியது. எஜமானின் கோபத் துக்கு என்ன காரணம் என்பது நாய்க்குத் தெரியவில்லை.

## 29. மயக்கம் தெளிந்தது!

கோமளத்தை அவனுடைய வீட்டில் கொண்டு போய் விட்டுவிட்டுச் சந்தானம் சென்ற போது, மாலை ஐந்து மணி இருக்கும். மிகுந்த பதற்றத்துடன் சோர்ந்து போய் வீட்டுக்குள் நுழைந்தபோது, கோமளத்தின் கால்கள் தள்ளாடின. வயிற்றுக்குள் ஏதோ புரள்வது போலிருந்தது. வாயிலிருந்து வீசிக் கொண்டிருந்த நெடி, குமட்டியது. நேரே குளியலறைக்குச் சென்றவள், வாந்தி எடுத்தாள். வயிற்றுக்குள் போயிருந்த நஞ்சு வெளியேறியது. ஆனால், நெஞ்சுக்குள்ளிருந்த அவமானத்தையும், வேதனையையும் ஒருங்கே வெளியேற்றுவது எப்படி ?

வாயையும் முகத்தையும் கழுவிக் கொண்டு படுக்கை அறைக்குள் சென்ற போது, சமையல் காரி ஓடி வந்தாள்.

''என்னம்மா? உடம்புக்கு என்ன?'' என்று சமையல்காரி பதறினாள்.

''ஒன்றுமில்லை. வயிற்றைப் புரட்டியது. குளியலறையை நன்றாகக் கழுவி விடு'' என்று கூறி படுக்கையில் விழுந்தாள் கோமளம். அவளால் நிதானமாகப் பேச முடியவில்லை. வாய் சற்றுக் குழறியது. தூங்க வேண்டும் போலிருந்தது. கண்களை மூடிக் கிடந்தாள். மனம் கனத்துக் கிடந்தது. எண்ணங்கள் சுழன்று அலைக்கழித்தன. கண் இமைகளைத் திறந்தாள். எதிரே சுவரில் தொங்கிக் கொண்டிருந்த கணவரின் புகைப்படத்தைப் பார்த்தாள். மனம் பொருமியது. வாய் விட்டுக் கதறி அழவேண்டும் போல் இருந் தது. ஆனால் அப்போது அவளால் அழக்கூட முடியவில்லை. கனத்துக் கிடந்த இமைகளைப் பாதித் திறந்தவாறு கணவரின் படத்தைப் பார்த்தபடி படுக்கையில் கிடந்தாள். பிறகு, பார்வை, மேஜையின் மீது கிடந்த நவரசம் பத்திரிகையின் மீது விழுந்தது. அட்டைப் படத்தில் அவளுடைய படம் கவர்ச்சியாகத் தோற்றம் அளித்தது.

இப்படிப் படம் போட்டு என்னைப் பிரபலப் படுத்தியதெல்லாம்.... சீச்சீ, எவ்வளவு தரம் கெட்ட மனிதர். எப்படி ஏமாந்துவிட்டேன்.. ஐயோ....... !

ஆசிரியர் சந்தானத்தோடு பழக்கம் ஏற் பட்ட நாளிலிருந்து பல சம்பவங்கள் நினைவில் தோன்றின. அவர் பழகிய விதமும், பேசிய தோரணையும், காட்டிய அக்கறையும் நினைவில் சுழன்றன.

சேச்சே, எவ்வளவு ஏமாளியாக இருந் திருக்கிறேம்.....

கோமளத்துக்குத் தன்மீதே கோபம் எழுந் தது —

'பிரமாதமாய் எழுதுகிறாள்' என்று ஊரில் பேர் வாங்கி என்ன பயன்? நெருங்கிப் பழகியவருடைய அந்தரங்க எண்ணத்தைப் புரிந்துகொள்ளாத நான் பேனா பிடிக்கவே அருகதை அற்றவள். உண்மையில் நான் என்ன எழுதிவிட்டேன்? நான் எழுதியவற் றில் முக்கால்வாசிக்கு மேல் சந்தானம் திருத் தியவைதாமே —

கோமளம் ஆயாசத்துடன் கண்களை மூடிக் கொண்டாள். சற்றுநேரத்துக்கு முன்னால் பத் திரிகை அலுவலகத்தில் நடைபெற்ற நிகழ்ச்சிகள் நினைவில் படர்ந்தன —

## அருளாசான் பிறந்த இருள்நீக்கி

மானுட வேடமிட்ட ராமபிரான் அன்னை வைதேகியை இழந்ததும் துயருற்றுத் தவித்ததை எல்லா ராமாயணங்களும் கூறும். ஆனால் 'ராமசரிதமானஸம்' என்கிற துளசிதாஸரின் ராமாயணத்திலேயே ஐயனின் துயர் இருள் நீங்கி அவர் மீளவும் ஆண்மை பெற்றதற்கு ஒரு புது வரலாறு கூறப்படுகிறது. ராகவன் தவிக்கிறானே என்று கைலை நாதனும் உமையன்னையும் பரிவு பொங்கி, சூரியனை அனுப்பி வைத்தனராம், சூரிய குலத் தோன்றலிடம். ஞான பானுவாக வந்த ஆதித்தன் ஸ்ரீ ராமனின் மன இருளை நீக்கி ஆண்மை ஒளியை ஊட்டினானாம். துளசி ராமாயணத்துக்கு அற்புதமான சான்று நம் தஞ்சை மாவட்ட மன்னார்குடி தாலுகாவில் உள்ளது. அங்கு ஆதித்தபுரம் என்ற ஊரை அடுத்துள்ள "இருள்நீக்கி" கிராமத்தில்தான் ராமபிரான் துயரிருள் நீங்கியதாகக் கருதப்படுகிறது. இருள் நீக்கியிலுள்ள கைலாசநாதர் ஆலயத்திலேயே ஸ்ரீராமர் நன்றி நெஞ்சுடன்



வழிபாடு நடத்தினார் என்று ஐதிஹ்யம்.

இன்று வடபுலத்தில் அநாசார இருளை நீக்கித் திரும்பி வரும் ஆசாரியர்கள் ஸ்ரீ காமகோடி ஜகத்குரு ஜயேந்திர சரஸ்வதி ஸ்வாமிகளின் ஜன்ம ஸ்தலமாக அமையும் பேறு இந்த இருள்நீக்கிக்கே கிடைத்திருக்கிறது. புதுப் பெரியவர்களின் ஆணைக்கிணங்க, இருள் நீக்கியில் தற்போது பாழுற்றுள்ள கைலாசநாதர் கோயிலுக்குத் திருப்பணி மேற்கொள்ளப்பட்டுள்ளது. விரைவிலேயே பணி சிறப்புற நிறைவுற்று இவ்வாலயம் சைவ சாம்ராஜ்யத்தில் ஒரு சுடர்த் தீபமாக ஒளிவீச அன்பர்கள் அடியிற்காணும் முகவரிக்குப் பொருள் அனுப்ப வேணும்: ஸ்ரீ எஸ். வி. சந்தானராமன், பொருளாளர், இருள்நீக்கி திருப்பணிக் குழு, கமலா ஸ்டோர்ஸ், தெற்கு மெயின் வீதி, தஞ்சாவூர்.

---

சந்தானம் மிகுந்த பரிவோடும் அன்போடும் ஒருவித உரிமையோடும்கூட — விஸ்கியை அவளுடைய தம்ளரில் ஊற்றியபோது, அவளால் தடுக்க முடியவில்லையே! அவர் காட்டிய பரிவு, அக்கறை, அவரால் அவளுக்குக் கிடைத்திருந்த விளம்பரம், புகழ், பெருமை — எல்லாமே அவளைச் செயலற்றவளாக்கிவிட்டன. தம்ளரிலிருந்த பானம் முழுவதையும் ஒரே மூச்சில் குடித்துவிட்டுக் கீழே வைத்த போது, அவளுடைய அந்தராத்மா ஏதோ முணுமுணுத்ததே தவிர, அவளைக் கண்டித்துக் காக்கவில்லை!

வெளியீட்டு விழாப் படங்களிலிருந்து நாலைந்து படங்களை 'நவரசத்'தில் அச்சிடத் தேர்ந்தெடுக்க முயன்ற போது, ஒரு படத்தை உரிமையோடு அவளுடைய கையைத் தீண்டி வாங்கினார் சந்தானம். அப்போதுகூட அவளுடைய அறிவு விழித்துக் கொள்ளவில்லை. தனிமையும், தனிமையில் ஓர் அந்நியனோடு நெருங்கி இருந்த நிலையும்கூட அவளுடைய சிந்தையில் உரைக்காமல் போய்விட்டனவே! ஓ....எவ்வளவு தூரம் மயங்கிப் பாதையை விட்டு விலகிப் போயிருந்தாள்!

போட்டோ எடுக்கும் பாவனையில் சந்தானம் துணிவுடன் நடந்து கொண்டவிதந்தான் அவளை எச்சரித்தது!

ஒருமேஜையின் மீது ஒய்யாரமாகச் சாய்ந்து நிற்க வைத்த போது, "இந்த மாதிரி எதற்கு? ஜவுளி விளம்பரத்துக்கா படம் எடுக்கப் போகிறீர்கள்?" என்று கேலியாகக் கேட்டாள்.

சிரித்துக் கொண்டே அவளை மிக நெருங்கி நின்று அவளுடைய தோளைத் தொட்டு அழுத்தி, புடவையைச் சீராக்கியபோது கோமளம் பதறிப் போனாள். ஆனால் சந்தானம் எவ்வித பரபரப்பையும் காட்டிக் கொள்ளாமல் போட்டோவுக்காக ஒப்பனை செய்வதாகப் பாவனை செய்து கொண்டு அவளைத் தீண்டினார்.

கோமளத்தின் வயிற்றில் எரிவதுபோல் இருந்தது. கால்கள் தரையில் அழுந்தி ஊன்றாமல் காற்றில் மிதப்பது போன்ற உணர்வு தோன்றியது. மது போதை என்பதை உணர்ந்து கொண்டாள். அந்த அனுபவம் அவளுக்குப் புதுமையாகவும் இருந்தது; வேடிக்கையாகவும் இருந்தது. உள்ளூறப் பயத்தையும் கொடுத்தது. "என்னவோ போல் இருக்கிறது!"

ஆசிரியர் சிரித்தார். "போகப் போக இன்னும் நன்றாக இருக்கும். புதுப் புது உணர்வுகள் தோன்றும்" என்று கூறிக் கொண்டே திடீரென்று அவளுடைய இடையைச் சுற்றிக் கையால் மெதுவாக வளைத்து, "இவ்வளவு சாய்ந்து நிற்க வேண்டாம். கொஞ்சம் நிமிர்ந்து கொள். போட்டோவுக்கு இந்தப் போஸ் பிரமாதமாக இருக்கும்" என்றார்.

அவருடைய துணிச்சல் அவளுக்குப் பயத்தைக் கொடுத்தது. பதற்றத்துடன் வேகமாக விலக முயன்றாள். ஆனால் சுற்றியிருந்த சந்தானத்தின் கை, அவளை இன்னும் வளைத்து இழுத்தது.

"என்ன இது? தள்ளி நில்லுங்கள்!" என்று கோமளம் பதறினாள்.

"இன்று இங்கு விடுமுறை, பயப்படாதே. இங்கு யாரும் வரமாட்டார்கள்" என்று குழைந்து கூறியபடி அவளை இன்னும் இறுக அணைக்க முயன்றார்.

"சீ, விடு என்னை! கூச்சல் போடுவேன். வாட்ச்மேன் வருவான்" என்றாள் கோமளம்.

"கூச்சல் போட்டால் உனக்குத்தான் கேவலம். இந்த விஷயம் ஊர் முழுதும் பரவும்" என்று எச்சரித்தார் ஆசிரியர்.

அவள் கூச்சல் போட்டிருந்தால், வாட்ச்மேன் வந்திருப்பான். அவள் தப்பியிருந்திருக்க முடியும். ஒரு பட்டிக்காட்டுப் படிக்காத பெண், அந்த மாதிரி சந்தர்ப்பத்தில் இரைந்து கூச்சலிட்டு ஊரைக் கூட்டியிருப்பாள். நாகரிகமும், அந்தஸ்தும் கோமளத்தின் வாயைக் கட்டிவிட்டன. தன்னுடைய அவமானம் மற்றவர்களுக்குத் தெரிந்துவிடுமே என்ற பயத்தினால் வாயை மூடிக் கொண்டாள். எப்படியும் அந்த இடத்திலிருந்து தப்பிச் சென்றுவிட வேண்டும் என்ற தவிப்பு இருந்தது. ஆனால் எண்ணத்தைச் செயலாற்ற விடாமல் அவளுடைய உடல்,










சக்தியை இழந்து கொண்டிருந்தது. கண் இமைகள் கனத்தன. உடல் காற்றில் மிதப்பது போலிருந்தது. கால்கள் தரையில் அழுந்துவதாகவே தெரியவில்லை. சந்தானம் அவளைச் சோபாவுக்கு இழுத்தபோது, காற்றில் மிதந்தபடியே சோபாவை அடைந்த மாதிரிதான் உணர்ந்தாள்.

மாலை ஐந்து மணி அளவில் கோமளத்தைக் காரில் ஏற்றிக் கொண்டு அவளுடைய வீட்டை நோக்கிச் சந்தானம் சென்று கொண்டிருந்த போது அவர் ஏதேதோ பேசிக் கொண்டிருந்தார் — அவளை அகில இந்தியப் புகழ்பெற்றவளாக ஆக்கப் போவதாகவும், அவளுடைய புகழுக்காக ஏதேதோ பல திட்டங்கள் போட்டிருப்பதாகவும், நவரசம் பத்திரிகையையே அவளுடைய முன்னேற்றத்துக்காக அர்ப்பணிக்கப் போவதாகவும் கூறினார். அவருடைய பேச்சு எதையும் உணர்ந்து கொள்ளும் நிலையில் கோமளம் இல்லை.

இனி, இனி.....? தன் எதிர்காலம் பற்றிய இந்தக் கேள்விதான் அவளுடைய உள்ளத்தில் பேரிரைச்சலாகக் கேட்டுக் கொண்டிருந்தது. அவளுடைய வீட்டு வாசலில் அவளை இறக்கிவிட்டுச் சந்தானம் போய்விட்டார்.

நல்ல வேளையாகக் கணவர் வீட்டில் இல்லை. அன்று மாலை அவர் வீட்டுக்கு வரவும் மாட்டார். நீதிமன்றத்திலிருந்து நேரே ஏதோ அலுவலாகப் பக்கத்து ஊருக்குப் போய்விட்டு மறு நாள் காலையில்தான் வருவார்.

கோமளத்தின் நெஞ்சம் வேதனை தாளாமல் துடித்துக் கொண்டிருந்தது. உடல் முழுவதிலும் ஏதோ ஓர் அசிங்கம் ஒட்டிக் கொண்டிருப்பது போன்ற அருவருப்பான உணர்வால் புழுங்கிக் கொண்டிருந்தாள். உள்ளூறக் கோபம் எழுந்தது. ஆரம்ப காலத்திலிருந்தே சந்தானம் தன்னிடம் பழகிய விதத்தை எண்ணிப் பார்த்தபோது, அவருடைய பேச்சு, செயல், அவர் காட்டிய அக்கறை எல்லாவற்றுக்கும் ஒரு தனிப்பட்ட அர்த்தமும், குறிக்கோளும் இருந்ததை இப்போது உணர்ந்தாள். காலம் கடந்து உணர்ந்து என்ன செய்ய? புகழ்ச்சியும், பெருமையும், விளம்பரமும் அவளுடைய அறிவை மயங்க வைத்துவிட்டன. ஆனால், மனைவியைக் காப்பாற்ற வேண்டும் என்ற உணர்வை அவளுடைய கணவரிடமிருந்து பறித்தது எது?

கணவர் மீது அடங்காத கோபம் எழுந்தது. அவருடைய ஏலாத்தனம்தான் இதற்கெல்லாம் காரணம் என்று கொதித்தாள். ஆரம்ப காலத்திலேயே அவர் விழிப்புடன் இருந்திருந்தால், சந்தானம் அவ்வளவு நெருங்கிப் பழகியிருந்திருக்க முடியாது.

'காவலற்ற பழ மரமும், கிழவனின் இளம் மனைவியும் எந்தச் சமயத்திலும் திருடு போகலாம்' என்று சந்தானமே ஒரு சமயம் ஒரு கதையில் எழுதியிருந்தது அவளுடைய நினைவில் வந்தது. தான் பெற்ற புகழ், பெருமை எல்லாவற்றையும் நினைத்துப் பார்த்தாள்.

ஓ......! அதில்தான் எவ்வளவு போதை, பரபரப்பு, ஆனந்தம், உற்சாகம், பெருமிதம்—இவ்வளவையும் பெறக் கடைசியில் அவள் கொடுத்த விலை.....! ஐயோ.....!

கோமளம் ஆயாசத்துடன் கண்களை மூடினாள். கணவரின் முகம் நினைவில் தோன்றியது. அவருக்கு ஒன்றும் தெரியப் போவதில்லை. அவருக்கு மட்டுமென்ன, யாருக்குமே தெரியாது. ஆனால், மனத்தை எப்படி ஏமாற்ற முடியும்? அது இப்போது தவிக்கும் தவிப்பையும், படும் வேதனையையும் அவளால் அடக்க முடியுமா? செத்தால்தான் மனம் அடங்கும்.

அலமாரியைப் பார்த்தாள். அங்கு மேல் தட்டில் தூக்க மாத்திரை பாட்டில் இருந்தது. நாககுந்தரம் இரவு தூங்குவதற்காக, சில வேளைகளில் உபயோகப்படுத்தும் மருந்து!

அந்த மாத்திரையில் பத்து மாத்திரைகளை எடுத்து ஒரே சமயத்தில் விழுங்கிவிட்டால் போதும்; ஒரேயடியாகக் கலையாத நித்திரையில் ஆழ்ந்துவிடலாம்.

மது மயக்கம் இப்போது அவளை ஆட்கொண்டிருந்தது.. மிகுந்த சிரமத்துடன் கண் இமைகளைத் திறந்து மாத்திரைப் பாட்டிலை உற்றுப் பார்த்தாள். அதை எடுக்க வேண்டும் என்று உணர்வு உந்தியது. ஆனால் உடல் செயலிழந்து கட்டையாகப் படுக்கையில் கிடந்தது. எழுந்திருக்கத் தெம்பில்லை. கண்கள் செருகின. அகலிகை போல் உணர்வற்றுக் கல்லானாள்.

அவள் விழித்து எழும்போது, தூக்க மாத்திரைப் பாட்டில் அலமாரியிலேயேதான் இருக்கும். அவளுடைய உருவத்தை அட்டைப் படமாகக் கொண்ட நவரசம் பத்திரிகையும் எதிரே இருக்கும் மேஜை மீதே தான் கிடக்கும்! (தொடரும்)

Printed and published by V. Vaidyanathan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-600031. Editor: K. Rajendran

